
EVERYTHING YOU WANT TO KNOW...
The Illustrated Weekly of India
The Illustrated Weekly of India



ஒதுங்க ஓரிடம்!
பட்ஜெட்
கள்ளச் சந்தை
கருப்புப் பணம்
வெள்ளை மாளிகை

# எதிர்க் கட்சிகள் இணையட்டும்; எதிர்காலம் சிறக்கட்டும்!

கல்கி

மலர் 34

இதழ் 3



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

பிரிட்டிஷார் நமது நாட்டில் தங்கள் ஆட்சியை ஸ்திரப் படுத்திக் கொண்டதைப் பிரித்தாளும் தந்திரம் என்பதாக வர்ணிப்பதுண்டு. அதாவது பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்ப்பவர்களுக்குள்ளேயே உட்பூசலையும் பகைமையையும் தூபம் போட்டு வளர்த்து விட்டுவிடுவார்கள். அவர்கள் ஒருவரையொருவர் தாக்கிக்கொள்வதையும் ஏசிக்கொள்வதையும் மக்களுக்குச் சுட்டிக்காட்டி, 'பார்த்தீர்களா? எங்களை விட்டால் உங்களைக் காப்பாற்றுவார் யார்?' என்று நீலிக் கண்ணீர் வடிப்பார்கள். தங்கள் ஆட்சியை மேன் மேலும் பலப்படுத்திக் கொள்வார்கள்.

ஏறத்தாழ இதே நிலைதான் இன்று இந்திரா காங்கிரஸ் ஆட்சி நிரந்தர ஆட்சியாக விளங்கவும் துணை புரிகிறது. ஆனால் ஒரு வித்தியாசம். இந்திரா அம்மையாருக்குத் தந்திரம் செய்யும் தொல்லையும் இல்லை; பூசலை வளர்க்கும் சிரமமும் இல்லை. எதிர்க் கட்சிகள் தாங்களாகவே தங்கள் தலையில் மண்ணை அள்ளிப் போட்டுக் கொண்டு ஆட்சிப் பொறுப்பை வெள்ளித் தட்டில் வைத்து இந்திரா அம்மையாரிடம் சமர்ப்பிக்கின்றன.

'இந்திரா அரசைப் பதவியிலிருந்து இறக்கிவிட்டால் ஆயிற்றா? அடுத்தாற்போல் யார் ஆட்சிப் பொறுப்பை ஏற்கப் போகிறார்கள்?' என்ற கேள்விக்குப் பதில் இல்லை. ஒன்றுபட்டு ஒரு சக்தி வாய்ந்த எதிரணியாகச் செயல்படாமல் மாற்றுக் கட்சிகள் தங்களுக்குள்ளேயே பூசலிட்டுக் கொண்டு மாய்கின்றன.

ஜனநாயகம் தழைக்க இரு கட்சி அமைப்பே நலம் பயக்கும். தொலைகிறது என்று மூன்றாவது கட்சி இருந்துவிட்டுப் போகலாம். ஆனால் இங்கோ? நெல்லிக்காய் மூட்டையை அவிழ்த்து உதறிய கதைதான்!

ஆளும் கட்சியின் கொள்கைகளுக்கு நேர்மாறான நல்ல கொள்கைகளை உடைய சக்தி வாய்ந்த எதிர்க் கட்சி உருவாக வேண்டும் என்ற நோக்கில்தான் ராஜாஜி சுதந்திரா கட்சியைத் தோற்றுவித்தார். ஆனால் எதிர்ப்புச் சிதறிவிடுவதில் உள்ள பலவீனத்தையும் அவர் உணர்ந்திருந்தார். எனவே தேர்தல் காலத் தாற்காலிக உடன்பாடாக மட்டுமின்றி எதிர்க் கட்சிகள் இணைவதையே கூட அவர் விரும்பினார். கருத்து வேறுபாடுகள் பல இருந்தாலும் குறைந்தபட்சம் பொருளாதாரக் கொள்கையின் அடிப்படையில் ஜனசங்கமும் சுதந்திராவும் ஸ்தாபன காங்கிரஸும் இணையலாம் என்றார். மற்ற அம்சங்களில் பாராளுமன்ற, சட்டமன்ற உறுப்பினர்களுக்கு வோட்டுச் சுதந்திரம் அளித்து விடலாம் என்றார்.

ஆனால், நமது தலைவர்களுக்கு நாட்டு நலனைவிடத் தமது சொந்தப் பிராபல்யமும் பிரபையும்தான் முக்கியமாகி விட்டன. தங்களைச் சுற்றி நாலுபேர் அல்லது நாலாயிரம் பேர் என்ற பெருமிதத்திலேயே போதை கொண்டு மிதக்கிறார்கள்.

ஜனசங்கமும் ஸ்தாபன காங்கிரஸும் ஒத்துழைப்பு நல்காவிட்டாலும் இதர சில்லறைக் கட்சிகள் பலவற்றை ஒருங்கிணைக்கலாம் என்று சுதந்திரக் கட்சியின் தலைவர் பிலு மோடியும் பாரதீய கிராந்தி தால் தலைவர் சரண்சிங்கும் பாடுபடுகிறார்கள். அதற்கும்தான் எத்தனை எதிர்ப்பு; எவ்வளவு வக்கரிப்பு! இதைப் பார்க்கும்போது பாரதீய லோக் தால் அமைந்தாலும் அதனால் உருப்படியாக எதுவும் சாதிக்க முடியுமா என்ற சந்தேகம் இப்போதே எழுகிறது.

சர்வ கட்சித் தலைவர்களும் சற்று ஆத்ம பரிசோதனை செய்து கொள்ளட்டும். இன்று நாட்டைப் பீடித்துள்ள பயங்கரமான அபாயம் எது? பொருளாதாரச் சீர்குலைவுதான். இதனை இந்திரா அரசின் உளுத்துப்போன சோஷலிஸக் கொள்கையால் சீர்ப்படுத்தவே முடியாது. இதை ஒப்புக்கொள்ளும் தலைவர்கள் அனைவரும் தத்தமது தனிப் பிரபையையும் கட்சிச் செல்வாக்கையும் தியாகம் செய்ய முன்வரட்டும். எதிர்க் கட்சிகள் இணையட்டும்; நாட்டின் எதிர்காலம் சிறக்கட்டும்.

# சிறுதரத் தொழிலதிபர்களுக்கு

# பெருமளவு உதவி!

நீங்கள் ஒரு சிறுதரத் தொழிலதிபராயிருந்தால் அல்லது அவ்விதம் ஆவதற்கு விரும்பினால், விரைந்து வந்து உங்கள் திட்டங்கள் பற்றி யூகோ பாங்க்கின் எந்த ஒரு கிளையுடனாவது கலந்தாலோசியுங்கள்.

ரூ.10,000 வரையிலான கடன்களுக்கு 8% வருட வட்டியும், ரூ.10,000 லிருந்து ரூ. 25,000 வரை 9% வருட வட்டியும், ரூ. 25,000 முதல் 1,00,000 வரை 10% வருட வட்டியுமே நீங்கள் கொடுக்க வேண்டி வரும். ரூ. 1,00,000க்கு மேலான கடன்கள் பற்றிய விவரங்களுக்கு அருகிலுள்ள எங்களது கிளையுடன் தொடர்பு கொள்ளுங்கள்.

தாங்களே தங்களுக்கு உதவ மக்களுக்கு
லாபகரமாக உதவுகிறது




# யூனைடெட் கமர்ஷியல் பாங்க்

UCOC-21 TAM

ஆனந்த ஆவணி 2
ஆகஸ்டு 18, 1974

# இந்த இதழில்

**எதிர்க் கட்சிகள் இணையட்டும்;
எதிர்காலம் சிறக்கட்டும்!**

ஜனநாயகம் தழைக்கச் சக்திமிக்க இரு கட்சி அமைப்பே சிலாக்கியமானது — தலையங்கம்.

**பிரதமரின் புது நாட்டுப்பெண்**

மேனகா ஆனந்த் பற்றிய சுவையான தகவல்கள்.

**அட்டைப் படப் பிரமுகர்**

ஃபக்ருதீன் அலி அகமது நமது அடுத்த ராஷ்டிரபதி என்பது தொண்ணூற்றொன்பது சதம் தீர்மானமாகி விட்ட விஷயம். பேட்டிக் கட்டுரை. மேலட்டை வண்ணப் படம்: **உத்தரா.**

**அரும்புகள்**

மூன்றாவது பரிசுக்கதை இன்றைய இளம் தலைமுறையின் மாறுபட்ட மனப்போக்குகளை அலசுகிறது.

**அரிசியும் அரசியலும்**

அரிசித் தட்டுப்பாடு இல்லை, சரிதான். பசிக்கு ஒரு கட்டுப்பாடு இருந்தால் தேவலாம்! அந்த விலை விற்கிறதே!



| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 30-00 | ரூ. 15-00 |
| இதர நாடுகள் | ரூ. 60-00 | ரூ. 30-00 |
| இலங்கை | ரூ. 44-00 | ரூ. 22-00 |



# கல்கி



# தார் பூசுகிறார் தி. பி. தார்!

தனியார் துறை எதிர்பார்த்த அளவில் நாட்டின் முன்னேற்றத்துக்கு உதவவில்லையாம்! தார் பூசப் பார்க்கிறார் தி. பி. தார்!

திட்டங்களில் முக்கியத்துவம் தரப்பட வேண்டிய இனங்கள் பின்னுக்குத் தள்ளப்பட்டதுதான் இன்றையப் பொருளாதார நெருக்கடிக்குக் காரணம் என்று இதே தார் சில தினங்களுக்கு முன் வேறு வழியின்றி ஒப்புக் கொண்டார். பண வீக்கத்தால் பரிதவிக்கும் நாடுகளுள் ஒன்றாக இந்தியாவை ஐ. நா. சபையே கருதுகிறது. ஐ. நா. பிரதம காரியதரிசி அனுதாபம் தெரிவித்திருக்கிறார். போதாதா அவமானம்?

ஊதாரிச் செலவினங்கள், டம்பாச்சாரித் திட்டங்களுக்காக ஏராளமாய் நோட்டு அச்சடித்து நாட்டின் பொருளாதாரத்தைப் பாழ்படுத்திய சிகாமணிகள் எந்தத் தைரியத்தில் தனியார் துறையைப் பழிக்க முற்படுகிறார்கள்? தங்கள் தவறுகளை மூடி மறைக்கத் தனியார் துறையை வம்புக்கு இழுக்கிற தந்திரம் இனியும் பயன் தராது. மக்களை எத்தனை நாளைக்குத்தான் ஏமாற்ற முடியும்?

கையையும் காலையும் கட்டிப் போட்டு விட்டு நடனம் ஆடு என்றால் எப்படி? அந்த நிலையில் பாரதத்தில் இன்று தனியார் துறை உள்ளது. அவ்வாறிருந்தும் அது அபார சாதனைகளைப் புரிந்திருக்கிறது. பெர்மிட் லைசென்ஸ் கண்ட்ரோல் ஆட்சியின் கட்டுப்பாடுகளைச் சமாளித்துக் கொண்டு, லஞ்ச ஊழல்களுக்கும் ஈடு கொடுத்து, தேர்தல் நிதிகளுக்குப் பணம் அழுது, மிரட்டல் உருட்டல்களுக்குப் பணிந்து, துவேஷப் பிரசாரங்களைப் பொறுத்துக் கொண்டு, பண வீக்கத்தால் நாளுக்கு நாள் உயரும் முதலீட்டுச் செலவினங்களையும், நஷ்டங்களையும் எப்படியோ சுமந்து கொண்டு தனியார் துறை பெருமிதம் கொள்ளக் கூடிய அளவில் வளர்ச்சியுற்றிருக்கிறது.

அரசுத் துறையில் திட்டமிட்டு நஷ்டப்பட்டுக்கொண்டிருக்கும் தொழிலகங்களைச் சீர்ப்படுத்தி விட்டுப் பிறகு தார் தனியார் துறைக்கு உபதேசம் பண்ணட்டும்! எழுபத்தி நாலாம் ஆண்டுக்கான ''இந்தியா பொருட்காட்சி'' நடத்துவதாகச் சொல்லிப் பின்னர் அரசு அதைக் கைவிட்டதால் ஒரு கோடி ரூபாயைச் சாக்கடையில் கொட்டியதாக ஆயிற்றே, அதற்கு என்ன பதில் வைத்திருக்கிறார் திரு தி. பி. தார்? ஒரு கோடி ரூபாயைக் கொட்டிக் கவிழ்த்த பின்தானா பொருட்காட்சியைக் கைவிடுவது பற்றி ஞானோதயம்?

## தியாகராஜரின் மறைவு



தன வணிக சமூகத்தில் பிறந்து நாட்டுக்குச் சேவையும் தொழிலுக்குச் சேவையும், கல்விக்கு அரும் பணியும், தமிழ் அன்னைக்கு அருந் தொண்டும் செய்தவர் கருமுத்து தியாகராஜ செட்டியார். பெருந் தலைவர்களுடன் கூடி, சுதந்திரப் போராட்ட காலத்தில் பணியாற்றினார். அதே சமயம் தொழில் வளத்தைப் பெருக்கலானார். பதினாறு மில்கள் அவர் ஆதிக்கத்தின் கீழ் இருந்தன. பாங்க் ஆப் மதுராவையும் மதுரா இன்ஷூரன்ஸ் கம்பெனியையும் தோற்றுவித்து நடத்தினார். இவருடைய தொழில் பெருக்கும் திறன் காரணமாய்த் 'தமிழ் நாட்டுப் பிர்லா' என்று அழைப்பார்கள். செட்டியார் அவர்கள் கல்விப் பணிக்காக ஒரு சாசுவத நிதி — தியாகராஜர் டிரஸ்ட்—ஏற்படுத்திக் கல்விப் பணிக்குத் தொடர்புள்ள பதினாறு கூடங்களை நடத்தி வந்தார். தொழிலாளர் நலனிலும் அக்கறை கொண்டு பல உதவிகள் அளித்துள்ளார். தீவிர சைவப்பற்றுக் கொண்டவர். மதுரையில் அரசாளும் கயற்கண் அம்மையின் நீங்காத பக்தர், அன்னையின் திருவடிகளில் சேர்ந்து விட்டார்.

## சுப்பையா மறைந்தார்



திருநெல்வேலி மாவட்டம் வீரவநல்லூரைச் சேர்ந்த திரு சுப்பையா சிறந்த தமிழ் எழுத்தாளர்; மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் தங்கப் பதக்கம் பரிசு பெற்றவர்; பல சிறுகதைகளும், நாவல்களும் எழுதிப் பிரசித்தி பெற்றவர்; 1948ம் ஆண்டு பேராசிரியர் கல்கி அவர்கள் இருந்து நடத்திய சிறுகதைப் போட்டியில் ''மடைகாவல்'' என்ற கிராமச் சூழ்நிலையில் புனையப்பட்ட சிறுகதைக்கு முதற் பரிசு பெற்றவர். திரு வி. எஸ். சுப்பையா, 1958ல் சென்னை வானொலி நிலையத்தில் பணி புரிந்து கொண்டிருந்த போது ஐ. ஏ. எஸ். பரீட்சையில் தேறி, கலெக்டராயிருந்து கடைசியில் தமிழ் நாடு அரசின் தலைமையகத்தில் விட்டு இலாகா காரியதரிசியாகப் பணி புரிந்து வந்தார்.

திரு சுப்பையா, இலக்கியம் மட்டுமின்றி, சமுதாய இயல், மொழி இயல், மானிட இயல், வரலாறு ஆகிய துறைகளிலும் ஆழ்ந்த புலமை மிக்கவர்; நட்புக்கு உகந்த நல்ல மனிதர். உழைப்பில் உற்சாகம் கொண்ட சுப்பையா ஐம்பத்தைந்து வயதிலேயே அகால மரணமடைந்தாலும் அவரது பணிகள் அவருக்குச் சிரஞ்சீவித் தன்மையைத் தரும்.

## வேதாளம் இறங்கியது!

பாக். அதிபர் புட்டோ பேச்சு வார்த்தைக்குத் தயார் என்று கூறி விட்டார். 'ஒடுக்கிவிடுவேன் நசுக்கி விடுவேன்' என்று ஆர்ப்பாட்டம் பண்ணினவர் அடங்கி ஒடுங்கி இப்போது சமாதானப் பேச்சு வார்த்தைகளை மீண்டும் தொடரலாம் என்கிறார். இந்த நல்ல சந்தர்ப்பத்தைப் பாரத அரசு கைநழுவ விடாமல் நன்கு பயன்படுத்திக் கொள்ளட்டும். புட்டோ மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக்கொண்டு விடுவதற்கு முன் அவசரம் அவசரமாக அமைதிப் பணியைத் தொடர்வது நலம். நிரந்தர சமாதானத்துக்கு வழி வகுப்பது உசிதம்.

# ஏட்டிக்குப் போட்டி!

அண்டை மாநிலங்களுக்குக்கூட உதவக்கூடிய அளவு தமிழ்நாடு உணவுப் பொருள் உற்பத்தி செய்கிறது. ஆனாலும் மக்களுக்கு உணவுப் பொருள்கள் சப்ளை செய்வதற்காகத் தமிழ்நாட்டிலேயே நியாயவிலைக் கடைகள் திறக்கப் படுகின்றன. இது வியப்பு அளிக்கிறது.

—பாதுகாப்பு மந்திரி ஜகஜீவன்ராம்

ஜகஜீவன்ராம் சார்! உங்களுக்கு ஞாபக மறதி அதிகம். 'அ'வை விட்டு விட்டீர்களே!

அரிசித் தட்டுப்பாட்டைப் பற்றியும் விலைவாசி உயர்வைப்பற்றியும் சொல்லியே தி.மு.க.வினர் ஆட்சிக்கு வந்தார்கள். அதே அரிசித் தட்டுப்பாடு, விலைவாசி உயர்வாலேயே ஆட்சியை விட்டு இறங்கப் போகிறார்கள்.

— கண்ணதாசன்

'அப்பனுக்குக் கவிழ்த்த ஆரக் கொப்பரை' பழமொழிபொய்க்காது.

''காய்கறித் தோட்டம் போடுங்கள்!'' என உணவு மந்திரி திரு சி. சுப்பிரமணியம் மத்திய மந்திரி சபையில் உள்ள சக மந்திரிகளுக்கும் உதவி மந்திரிகளுக்கும் யோசனை தெரிவித்துள்ளார். —பத்திரிகைச் செய்தி

மற்ற மந்திரிகளுக்கு உருப்படியான ஒரு வேலை வைத்த உணவு மந்திரியின் யோசனை பாகற்காயாக அல்லவா அவர்களுக்குக் கசக்கும்!

ஆகஸ்டு பதினைந்தாம் தேதியன்று சுதந்திர தின விழாவை முன்னிட்டு மாதர் சங்கங்களில் கொடியேற்று விழா செய்து குழந்தைகளுக்கு இனிப்பும் வழங்கிச் சிறப்பாகக் கொண்டாட வேண்டும்!

— டி. என். அனந்தநாயகி

'கொடியேற்றி விடுகிறோம்! இனிப்புப் பற்றிப் பேசாதீர்கள். சர்க்கரைக்குக் 'க்யூ'வில் யார் நிற்பது?' என்று மாதர் சங்க அங்கத்தினர்கள் அங்கலாய்க்கிறார்கள்.

சென்னையில் கெரோஸின் தட்டுப்பாடு ஓரிரண்டு தினங்களில் தீர்ந்து விடும்.

—சிவில் சப்ளைஸ் கமிஷனர் பாண்டே

ஏற்கனவே பல வீடுகளில் கெரோஸினை தீர்த்து விட்டது, அவருக்குத் தெரியாதா?

நாட்டில் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் உரத் தட்டுப்பாட்டைப் பயன்படுத்திக் கொண்டு சில சமூக விரோதிகள் உரத்தில் அதிக அளவுக்குக் கலப்படம் செய்கின்றனர். இந்தக் குற்றவாளிகள் மீது வழக்குத் தொடர்ந்து உடனடியாகத் தீர்ப்புக்கூற மாநில அரசுக்கு அதிகாரங்கள் கொடுக்கப் பட்டிருக்கின்றன.

— மத்திய அமைச்சர் சி. சுப்பிரமணியம்

அந்த விசேஷ அதிகாரத்தைப் பயன்படுத்த மாநில அரசுக்கு (நெஞ்சு) உரம் வேண்டுமே! அதற்கு எங்கே போவது?

அரசு சமீபத்தில் எடுத்துள்ள பண வீக்கத் தடுப்பு நடவடிக்கைகள் தொழிலாளர் நலனுக்கு விரோதமானதல்ல. இந்த நடவடிக்கைகளால் மாத வருமானக்காரர்கள், தொழிலாளர்களின் உண்மையான வருமானத்தை அரசு பாதுகாக்கும்.

—டி.பி. தார், மத்திய சர்க்கார் இட்ட மந்திரி

அமைச்சர் சொல்வது ரொம்ப சரி. அதிகரித்துத் தரப்படும் பஞ்சப் படியில் பாதியை அரசு பிடுங்கிக் கொண்டு போய் வைத்துக் கொண்டால் தொழிலாளர் வயிறு வாடினாலும் பணம் பாதுகாப்பாகத்தானே இருக்கும்! வயிறே, வாழ்த்தக் கற்றுக் கொள்!











---

ராஜாஜி சிந்தனை

## காந்தீயத்துக்கு எதிரான ஆட்சி!

அரசுக்கு அதிகபட்ச அதிகாரம் மக்களுக்குக் குறைந்தபட்ச சுதந்திரம் என்ற அடிப்படையில் செயலாற்றும் இந்த அரசாங்கத்தையும் கட்சியையும் காந்தியத்துக்கு எதிரான அரசு என்றும் காந்தியத்துக்கு எதிரான கட்சி என்றும் அழைக்க நான் தயங்கவில்லை.

காங்கிரஸ் ஆளத் தெரியாமல் விழிக்கிறது என்பதைத் தேசம் உணர்ந்து விட்டது. அக்கட்சிக்குப் பரவலான பலமான எதிர்ப்பு உருவாகி வருகிறது. காங்கிரஸ் ஓர் அரசியல்கட்சி என்ற முறையில் அல்லாது ஏதோ ஓர் உயர்ஜாதி போல் விளங்கி ஒரு சம்பிரதாயப் பழக்கம் என்ற அளவில் ஆட்சியில் அமர்ந்திருக்கிறது.

காங்கிரஸுக்கு எதிரான உணர்ச்சிகள் வளர்வது காரணமாகப் பல்வேறு எதிர்க்கட்சிகளின் பிடிவாதங்கள் தளர்ந்து அவர்கள் ஒன்றுபட்டுக் காங்கிரஸை ஆட்சியிலிருந்து வெளியேற்ற ஆர்வத்துடன் முன் வருகிறார்கள். தேசம் இதனை ஆமோதிப்பதுடன் திருப்தியுடனும் நம்பிக்கையுடனும் நோக்குகிறது. மக்கள் நல்ல ஆட்சி, சட்டபூர்வமான ஆட்சி மீண்டும் ஏற்பட வேண்டும் என்று எதிர்பார்க்கிறார்கள்.

—சுயராஜ்யா, ஜூலை 23, 1966

# நீல முகப்பு
# 955




## உழைப்பு
## சக்தி
## பாதுகாப்பு



### எவரெடி 955
### அதன் விலைக்கு சிறந்த
### மதிப்பு அளிக்கிறது

**உழைப்பு**–சக்தி வீணாகிப்போவதில்லை. ஆதலால், நல்ல நீடித்த உழைப்பிற்கான கூடுதல் சக்தியைப் பெறுகிறீர்கள்.

**சக்தி**–விசேஷ உலோகத்தாலான அடிப்பாகம் பாட்டரிக்குப் பாட்டரி இடைவிடாத தொடர்பை நிச்சயப்படுத்தி அதனால் உண்டாகும் சக்தியனைத்தையும் வழங்குகின்றது.

**பாதுகாப்பு**–ஒன்றின் மேல் ஒன்றுள்ள தடிப்பான ஜாக்கெட் ஒழுகிச் செல்வதைத் தவிர்க்கின்றது–உங்கள் டார்ச்சையும் பாதுகாக்கின்றது.

UC 7954




அர்த்த நாரீசுவரர் ஆகட்டும், சங்கர நாராயணர் ஆகட்டும், இரண்டிலும் வலது பக்கம் பரப் பிரம்ம ஸ்வரூபமான பரமேசுவரனே இருக்கிறார். வலது என்பதை எலெக்ட்ரிஸிடியின் பாஸிடிவ் என்று வைத்துக் கொண்டால் இடது பக்கம் நெகடிவ் ஆகிறது. பாஸிடிவ் சக்தி ஒரு மையக் கருவாக ( Nucleus ) இருக்க, நெகடிவ் சக்தி அதைச் சுற்றி அதிவேகமாகச் சுழன்று கொண்டிருப்பதாக அணு விஞ்ஞானிகள் சொல்கிறார்கள். நிர்க்குணமான பிரம்மத்தை மையமாக, ஆதாரமாகக் கொண்டு சகுணமான சக்தி இயங்குவது பாஸிடிவைச் சுற்றி நெகடிவ் சுழலுகிறதுதான். இதுவே ஆராதனைக்காக ஒரு மூர்த்தியாக வருகிறபோது, மத்திய ந்யூக்ளியஸ் — சுற்றி வருகிற சக்தி என்று இல்லாமல் வலது பக்கம், இடது பக்கம் என்று இரண்டு கூறுகளாக திவ்ய ஆகாரம் (வடிவம்) எடுத்துக் கொள்கிறது. இதில் வலது, பாஸிடிவ், செயலில்லாத ஆதாரப் பிரம்மம் ; இடது, நெகடிவ், சகல காரியங்களுக்கும் மூலமான பிரம்மத்தின் சக்தி. இது அர்த்தநாரீசுவர ஸ்வரூபத்தில், ஸ்திரீ ரூபமாகி அம்பாளாயிருக்கிறது; சங்கர நாராயண வடிவத்தில் புருஷ ஆகாரம் கொண்டு ஸ்ரீ மகாவிஷ்ணுவாக இருக்கிறது.

திருமங்கையாழ்வார் பெருமாளைப் பற்றிப் பாடுகிற போது,

**'பிறை தங்கு சடையானை வலத்தே வைத்து'**

என்கிறார். பெருமாள் தமக்கு வலப் பாதியில் ஈசுவரனை வைத்துக் கொண்டிருக்கிறார் என்றால், ஈசுவரனின் இடப் பாகத்தில் பெருமாள் இருக்கிறார் என்றுதான் அர்த்தம்.

காரியமில்லாமல், கேவல ஞான மயமாக இருக்கிற பிரம்மத்தைப் பரமேசுவரன் என்றால், சகல ஜகத் காரணமாகிற மாயா தத்துவத்தையும், இதிலிருந்து விடுவிக்கிற காருண்யத்தையும் அம்பாள் என்றோ மகா விஷ்ணு என்றோ சொல்கிறோம். பரமேசுவரனுடைய சக்தி அவள்; சாட்சாத் நாராயணனே அவள்.

இதைப் பௌராணிகமாகச் சொல்கிறபோது அவளை ஈசுவரனுக்குப் பத்தினி என்றும், மகாவிஷ்ணுவுக்குத் தங்கை என்றும் பார்க்கிறோம். அம்பாளை 'சிவ சக்தி ஐக்ய ரூபிணி' என்று சொல்லி முடிக்கிற லலிதா ஸஹஸ்ரநாமத்தில் இன்னோர் இடத்தில் 'பத்மநாப ஸஹோதரீ' என்று கூறியிருக்கிறது. அம்பாளைத் தவிர வேறெந்த தேவதா பேதத்தையும் பாடாத ஸ்ரீ ச்யாம சாஸ்திரிகள், தம் கீர்த்தனங்களிலெல்லாம் அவளை 'ச்யாம க்ருஷ்ண ஸஹோதரீ' என்றே அழைத்து, இதையே தம் முத்திரையாக வைத்திருக்கிறார்.

க்ருஷ்ணாஷ்டமியின்போதே யசோதைக்குப் பெண்ணாகப் பிறந்த விஷ்ணு மாயை அவள் தான். ஸ்ரீ ராமநவமியின் போது அவள் ஞானாம்பிகையாக அவதரித்த வஸந்த நவராத்திரி நிகழ்கிறது.

ஆண்டாள் ஸ்ரீ க்ருஷ்ண பரமாத்மாவைக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சொப்பனம் கண்டு, அதைப் பாசுரமாகப் பாடியிருக்கிறாள். அதிலே வைதிகப் பிராம்மண சம்பிரதாயப்படி, தனக்கு நாத்தனார் கூறைப் புடவை கட்டி மாலை போட்டு முகூர்த்தப் பந்தலுக்கு அழைத்து வந்ததாகச் சொல்கிற போது, க்ருஷ்ணனின் சகோதரியான அம்பாளே இப்படி நாத்தனார் ஸ்தானம் வகித்ததாக ஆண்டாள் பாடியிருக்கிறாள் :

**மந்திரக் கோடி உடுத்தி மணமாலை**
**அந்தரி சூட்டக் கனாக் கண்டேன் தோழீ நான்**

அந்தரி என்றாள் அம்பாள்.

இப்படி அம்பாளை ஒரு பக்கம் ஈசுவரனோடு அபேதமாகவும், இன்னொரு பக்கம் ஸ்ரீ மஹாவிஷ்ணுவோடு அபேதமாகவும், ஒருத்தருக்குப் பத்தினி, இன்னொருத்தருக்குச் சகோதரி என்று பாவித்துப் பழகிவிட்டால், அப்புறம் ஈசுவரனுக்கும் பெருமாளுக்குமிடையே உசத்தி — தாழ்த்தி சொல்லவேமாட்டோம்.

காரியமில்லாத நிலையில் இருக்கிற ஒரே வஸ்து காரியமாகிற போது பல ரூபங்களாகிறது; இந்த ரூபங்களிடையே ஒன்றுக்கொன்று உசத்தி — தாழ்த்தி இல்லை; அதே மாதிரி இந்த ரூபங்களுக்கும் இவை எல்லாவற்றுக்கும் மூலமாக இருக்கப்பட்ட அந்த ஒரே வஸ்துவுக்கும் இடையிலும் வேறுபாடே இல்லை. இந்த ஞானம் நமக்கு வந்துவிட்டால் நம் மதத்தில் சண்டை, சச்சரவு, அபிப்பிராய பேதம், பிணக்கேயில்லாமல் ஆகும். ஈசுவர பத்தினியாகவும், பத்மநாப சகோதரியாகவும் இருக்கிற அம்பாள் இந்த சமரஸ பாவனையை நமக்கு அநுக்கிரஹிக்க வேணும்.

''அரிசிப் பஞ்சமா, யார் சொன்னது? அரிசி இருக்கிறது; தாராளமாய் இருக்கிறது'' என்று திரும்பத் திரும்பச் சொல்கிறார் முதல்வர். ஆனால் பிரச்னை அதுவல்ல. படி மூன்றரை ரூபாய்க்குக் கிடைத்துக்கொண்டிருந்த அரிசி திடீரென்று ஐந்து ரூபாய், ஐந்தேகால் ரூபாய்க்கு விற்கிறது. நியாய விலைக் கடைகளிலும்கூட இதே விலைதான்! திடீர் விலை ஏற்றத்துக்குக் காரணம் என்ன? யார் பொறுப்பு?



# அரிசியும் அரசியலும்!

கே. ஜே. ஸ்டோர்ஸ் கடை முதலாளி: ''இந்த அரிசி அரசியலுக்குக் காரணமே இடைக்கால பட்ஜெட்தானுங்க. பட்ஜெட்டிலே விலை கூடலாம்னு மொத்த வியாபாரிங்க அரிசியைப் பதுக்கி வைச்சிருந்தாங்க. பத்து மூட்டை, இருபது மூட்டை வியாபாரம் பண்ற சிறிய கடைக்காரங்க ஐந்து மூட்டைகளை வைத்துக் கொண்டு பெரிய கூட்டத்தை எப்படிச் சமாளிக்க முடியும்? அதனாலே சின்னக் கடைகளிலே சிலபேர் பலாத்காரமாப் புகுந்து அரிசியைக் குறைந்த விலைக்கு விற்கச் சொன்னாங்க. உடனே சிறிய வியாபாரிங்க பயந்துபோய்க் கடைகளை மூடிட்டாங்க. மொத்த வியாபாரிங்களிடமிருந்து அரிசியை அவங்க வாங்கிக்கிட்டு வரலே. தட்டுப்பாடு வந்துட்டுதுங்க.''

''இப்போ அரிசி நிலைமை எப்படி இருக்கு?''

''ரெட்ஹில்ஸ் அரிசி மார்க்கெட்டுக்குப் போய் வந்தேனுங்க. முந்தியெல்லாம் அங்கே ஏழரை மணிக்கே அரிசி தீர்ந்துடுங்க. இப்போ ஒன்பதரை மணி வரை அரிசி கிடைக்குதுங்க. நிறைய அரிசி வர ஆரம்பிச்சிடுத்துங்க... விலைதான் அதிகமுங்க...!''

மாம்பலம் அரிசி ஸ்டோர் சின்னக் கடை முதலாளி யுவராஜ்: ''ஆந்திராவிலிருந்து இப்போ அரிசி வர்றது குறைஞ்சு போச்சுங்க... தஞ்சாவூரிலிருந்த அத்தனை அரிசியையும் கட்டுப்பாடுகளைத் தளர்த்தியபோது கூடுதலான விலையிலே போட்டுட்டாங்க. அதற்குப் பிறகு அடுத்த மகசூல் வரை அங்கிருந்து வர்றது குறைச்சல்தானே?''

''அரிசி விலை இப்படிக் கிடுகிடுவென்று ஏறக் காரணம் என்ன?''

''மூன்று வருஷங்களுக்கு முன்பு ஐ.ஆர். 8 அரிசி கிலோ 66 பைசாவுக்குக் கிடைச்சுக் கிட்டிருந்தது. இப்போ 400 சதவிகிதம் கூட்டிச் சர்க்காரே கிலோ ரூ. 2.50க்கு விற்கச் சொல்றாங்க. அதாவது ஐ. ஆர். 8 அரிசி ஒரு படி நாலு ரூபாய் ஆகுதுங்க. இந்தச் சாதாரண அரிசியே நாலு ரூபாயானால் நல்ல ரகத்துக்குக் கூடுதல் விலை வைச்சால் என்ன என்று வியாபாரிக்குத் தைரியம் ஏற்பட்டுடுத்துங்க. ஐந்து ரூபாய் ஐந்தரை ரூபாய் வரை விற்கத் தொடங்கி விட்டாங்க!''

தமிழக முதல்வர் திரு கருணாநிதி பத்திரிகை நிருபர்களிடம் கூறியது:

''சென்னைக்கு அண்மையில் வந்திருந்த மத்திய சர்க்கார் திட்ட மந்திரி தார் அவர்களிடம் சொன்னேன்: 'தமிழ் நாட்டில் உணவுத் தட்டுப்பாடு, விலை உயர்வு எழக் காரணம், மோட்டாத் தானியங்களை (coarse grain) எல்லா ராஜ்யங்களுக்கும் அனுப்பலாம் என்று மாநில அரசுக்குத் தெரிவிக்காமலே மத்திய அரசு எடுத்த நடவடிக்கைதான்.''

- பி. எஸ். எம்.

தஞ்சையில் பெரிய அரிசிக் கடைகள் உள்ள ஐயன் கடைத் தெருவில் ரேஷன் அரிசிக்காக மக்கள் 'க்யூ' வரிசையில் காத்து நின்றனர். தமிழ் நாட்டில், மூன்றில் ஒரு பங்கு அரிசித் தேவையைப் பூர்த்திசெய்யும் தஞ்சை மாவட்டத்தின் வரலாறு காணாத புதுமை இது! கீழ வாசல் கடைத்தெருவிலும் அரிசி 'க்யூ' நின்றது. கரந்தை கடைத் தெருவிலும் இதே கதைதான்.

கலெக்டர் காரியாலயத்தில் அரிசி விநியோகத்தின் உத்தியோக பூர்வமான நிலைமையை அறிந்து கொள்ளலாம் என்று சென்றேன். கலெக்டர் வெளியூர் முகாம் சென்றிருந்ததால், சிவில் சப்ளைஸ் இலாகாவின் தலைமை எழுத்தரைக் கண்டு, ''ஏன் ஸார், தற்போது தஞ்சாவூரில் நிலவும் இந்த அரிசித் தட்டுப்பாடு....'' என்று நான் என் பேச்சைத் தொடங்கியதுமே, அவர் ''தட்டுப்பாடு என்ற சொல்லுக்கு இடம் ஏது? அரிசிதான் தாராளமாய்க் கிடைக்கிறதே!'' என்றார்.

''ஆனால் விலை ரொம்பவும் அதிகமாயிருக்கிறதே!'' என்றேன்.

உடனே அவர், ''ஸார்! அது வேறு விஷயம்! இந்தச் சூழ்நிலைக்குரிய காரணங்களை அரசு சார்பான புள்ளி விவரங்களுடன்தான் விளக்க முடியும். பொதுமக்கள் அவற்றை ஏற்க மறுக்கலாம். ஆகையினால், நீங்கள்

மேலே படம்: கோடம்பாக்கம் பாலத்தின் கீழே அரிசி வியாபாரம்.

இவ்வூரில் உள்ள பெரிய அரிசி வியாபாரிகளைப் பாருங்கள். அரிசிக் கடைகளுக்குச் சென்று பாருங்கள். ரேஷன் கார்டு மூலம் அரிசி மலிவாகக் கிடைக்க அரசு ஏற்பாடு செய்திருக்கிறது'' என்றார்.

போகிறது. அரசாங்கம் கூறும் சமாதானங்கள் எல்லாவற்றையும் மக்கள் அப்படி அப்படியே ஏற்றுக்கொண்டுவிடமாட்டார்கள் என்ற அளவுக்காவது புரிந்து வைத்திருக்கிறாரே என்ற நினைப்பில் அங்கிருந்து கிளம்பினேன்.

ஒரு சைக்கிள் ரிக்ஷாக்காரர், குதிரை வண்டிக்காரர், இரண்டொரு ஆபீஸ் எழுத்தர்கள் ஆகியவர்களைச் சந்தித்துப் பேசியதில், அரிசித் தட்டுப்பாடு இல்லை என்பதை அனைவரும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் யானை விலை, குதிரை விலை என்கிற வசனம் போய் அரிசி விலை என்ற புது வசனம் பிறந்துவிடும் போலிருக்கிறது! வெளிமார்க்கெட்டைவிட அரசின் நியாயவிலைக் கடைகளில் அரிசி சிறிதளவு குறைந்த விலைக்குக் கிடைக்கிறது என்பது உண்மைதான். ஆனால் கியூவில் மணிக்கணக்கில் நின்று கொண்டிருந்தால், ஆபீசுக்கு எப்படிப் போவது ? நம் வேலையை யார் கவனிப்பது என்ற ஒரு நடுத்தர வர்க்க கிருகஸ்தரின் கேள்விக்குப் பதில் கூற என்னால் முடியவில்லை. முதல்வர் ஒருவேளை பதில் வைத்திருக்கிறாரோ என்னவோ ?

ரிக்ஷாக்காரர் சொன்னது: ''இங்கே நாள் முழுதும் ரிக்ஷாவை மிதித்தால் ரூ. 5— தேறினால் அதிகமுங்க. அரிசி விலையே இப்படி ஏறிடிச்சானா மத்த செலவுக்கு என்னங்க செய்யறது?''

'அரிசித் தட்டுப்பாடுதான் இல்லையே! முதல்வரே கூறிவிட்டார்! மற்றதைப்பற்றி நீ ஏன் கவலைப்படுகிறாய்?' என்று அந்த ரிக்ஷாக்காரரைக் கேட்க எனக்குத் தைரியம் இல்லை!

பிறகு பூண்டி கிராமம் சென்று மிராசுதார் திரு துளசி ஐயா வாண்டையார் அவர்களைக் கண்டு பேசினேன். நெல் கொள் முதல், விலை நிர்ணயம், விநியோகம் ஆகியவைகளில் அரசின் நிலையற்ற போக்கு, திடீர் திடீர் உத்தரவுகள், உத்தரவு மாற்றங்கள்தாம் இந்த விபரீத நிலைக்குக் காரணம் என்பதைக் காரண காரியங்களுடன் விளக்கினார்.

அரிசியைத் தஞ்சை மாவட்டத்துக்கு வெளியே கொண்டு செல்வதற்கு இருந்த தடையை நீக்கிவிடவே வியாபாரிகள் அண்டை மாநிலத்தில் விற்றுக் கொள்ளலாம் என்ற துணிச்சலில் அதிக விலை கொடுத்து வாங்க முற்பட்டார்கள். பல விவசாயிகள் இப்படித் திடுதிடுவென்று விலை உயர்ந்தது கண்டதும் ஆசைப்பட்டு விதைக்கு வைத்திருந்த நெல்லைக்கூட விற்றுவிட்டார்கள்! இது மனித இயல்பு. மறுபடியும் அரிசிப் போக்குவரத்துக்கு அரசு தடை விதித்தபோது அது காலம் கடந்த செயலாகி விட்டது.

.....வரலாறு காணாத காட்சி



தஞ்சையில் அரிசிக்காகக் கூட்டம்....





★ விவேகானந்த கேந்திரத்தின் புதுதில்லி கிளையின் கூட்டம் மாவ்லங்கர் அரங்கத்தில் வெகு விமரிசையாக நடைபெற்றது. ஸ்ரீ ஏகநாத் ரானடே இவ்வைபவத்தில் பங்கு கொண்டார்.



★ அடையாறு லட்சுமணனின் மாணவியான பேபி ராஜேசுவரியின் பரதநாட்டிய அரங்கேற்றம் அண்மையில் மயிலாப்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் கிளப்பில் நடைபெற்றது. அலாரிப்பு, ஜதிஸ்வரம் ஆகியவற்றில் விறுவிறுப்பைக் காட்டிய பேபி ராஜேசுவரி, "நீ உரைப்பாய்" என்ற ராகமாலிகைக் கீர்த்தனத்தில் விஸ்ராந்தியாக ஆடினாள். ஹம்ஸானந்தி ராகத்தில் "கண்ணன் மதுர கீதம்" என்ற பாட்டின் ஆழ்ந்த அபிநயங்கள் சிறப்பாக இருந்தன.

★ பதினாறு குழந்தைகளுக்கு அன்னையான ஸ்ரீமதி மரியா வின்லே பெருமிதத்தோடு தன் கணவருக்கு அருகில் அமர்ந்திருக்கிறாள்! அவள் பெருமிதத்துக்குக் காரணம், நியூயார்க் நகரத்திலுள்ள ஓர் ஆரம்பப் பாடசாலையில் படித்துச் சான்றிதழ் பெற்றதுதான்! ஐம்பத்திரண்டு வயதான இவ்வம்மையார் உயர்நிலைப் பள்ளிப் படிப்பைப் முடிக்கவும் திட்டமிட்டிருக்கிறாள். அதோடு மட்டுமல்ல, 'கடவுள் அருள்' இருந்தால் நர்ஸ் பட்டம் பெறத் தீர்மானித்திருக்கிறாள். ஸ்ரீமதி மரியாவின் கணவர் மதகுரு. இவளது நான்கு குழந்தைகள் கல்லூரியில் பயின்று வருகிறார்கள்.





★ ஜாம்ஷெட்பூர் டெல்கோ பாரதிய கலா சங்கத்தின் ஆதரவில் குமாரி மதுவின் பரத நாட்டியம் சமீபத்தில் சிறப்பாக நடந்தது. எட்டரை வயதுச் சிறுமியின் நடனச் சிறப்பை ரசிகர்கள் பாராட்டினர்.



இப்போதுகூட விவசாயிகள் மூன்று மாதத்துக்குரிய நெல் வைத்துக்கொள்ளலாம் என்று உத்தரவிடும் அரசு மறுநாளே ஆறு மாதத்துக்குரிய நெல்லை வைத்துக்கொள்ளலாம் என்று உத்தரவு பிறப்பிக்கிறது. இவையெல்லாம் தீர யோசியாமல் அரசு அரை வேக்காட்டுச் சிந்தனையுடன் இயங்குகிறது என்பதையே உணர்த்துகின்றன. இவர் உத்தரவுகளால் அதிகப் பயன் அடைந்தது சில கட்சிப் பற்றுள்ளவர்களே என்ற வதந்தியில் எவ்வளவு நியாயம் இருக்கிறதோ இல்லையோ, மக்கள் நிச்சயம் பயன் அடையவில்லை.

சமீபத்தில் ரசாயன உரம், பண்ணையாள் கூலி முதலியன 'உயர்ந்திருப்பதால் அரிசி விலை கொஞ்சம் ஏறும் என்பது எல்லோரும் எதிர்பார்த்ததுதான்'. ஆனால் திடும் என்று விஷம்போல் இப்போது ஏறியதற்கு முழுப் பொறுப்பும் தி. மு. க. அரசின் தீர்க்கதரிசனமற்ற உத்தரவுகளே ஆகும். இவை பெருவாரியான அரிசிப் பதுக்கல், பயங்கர விலையேற்றம் எல்லாவற்றுக்கும் வழி வகுத்து விட்டன. போதாக் குறைக்குக் குறுவைச் சாகுபடி தாமதப்படும் என்ற நிலையும் விலையேற்றத்துக்கு உதவியிருக்கிறது.

'விலை உயர்கிறதே' என்றால் 'இந்திரா அம்மையாரின் மாநிலத்தைப் பாருங்கள், சவானின் மாநிலத்தைப் பாருங்கள்' என்று கூறித் தட்டிக் கழித்தவர்கள் இப்போதும் ஏதேதோ புதுக் காரணங்களைக் கற்பித்துத் தட்டிக் கழித்துக் கொண்டுதானிருக்கிறார்கள். மக்கள் இவர்களைத் தட்டிக் கழிக்க எத்தனை காலம் ஆகும்?

— ஸோமாஸ்

# பிலிப்ஸ் ஃப்ளுரோஸென்ட் லாம்புகளில் ஓரங்கள் கறுப்பதைத் தடுப்பது எது?

ஃப்ளுரோஸென்ட் லாம்புகளில் ஓரங்கள் கறுத்துவிட்டால் ஒளித்திறன் குறைந்து பார்ப்பதற்குக் கவர்ச்சி யற்றதாகத் தோற்ற மளிக்கும். காரணம்? எமிட்டர் பேஸ்ட் கணங்கள். இவை லாம்ப் பொருத்திய வுடன் தெறித்துக் குழலின் மேற் புறத்தில் படிந்து விடுகின்றன. ஆனால் பிலிப்ஸ் லாம்புகளில் இது ஏற்படுவதில்லை. அதுவே தெறிக்கும் எமிட்டர் கணங்களைப் பிடிக்கும் சாதனம் இருப்பதின் விசேடம். இது எலெக்ட்ரோடு களைச் சுற்றியுள்ள ஒரு வளையமாகும். எமிட்டர் பேஸ்ட் கணங்கள் தெறிக்கும் போது அவை லாம்பின் மீது படி வதைத் தடுத்து விடுகிறது. அதனால் ஓரங்கள் கறுப்பது தடுக்கப்பட்டு ஒளிக் கதிர்களின் திறன் மிகச்சீரான நிலையில் இருக்கின்றன. இது தான் மற்ற எந்த ஃப்ளுரோஸென்ட் லாம்பிலும் இல்லாத ஒரு விசேட அமைப்பு.

## எலெக்ட்-ரோடுகளைச் சுற்றியுள்ள ஆனோட்ரிங்.






பிலிப்ஸ் ஃப்ளுரோஸென்ட் லாம்புகளைப் பற்றி மேலும் அறிந்து கொள்வது லாபமளிக்கிறது.

**பிலிப்ஸ்**




பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

"ரெக்ஸ் பேகிங் பவுடர்

# உபயோகித்து, மென்மையாக சுவைபடத் தயாரிக்கப்பட்ட கேக்குகளை என் தேநீர் விருந்துகளில் அனைவருமே விரும்புகின்றனர்"



என்கிறார் திருமதி சுலோசனா ராவ்.
'ஹரி நிவாஸ்', 95, மர்ரெட்பள்ளி, சிகந்தராபாத், ஆந்திர பிரதேஷ்.

கார்ன் ப்ராடக்ட்ஸ்
தேர்ந்தெடுத்த
பரிசு – பெற்ற
பக்குவ முறை

## முட்டை கலவாத சாக்கலேட் கேக்

தயாரிக்க உதவுவது
ரெக்ஸ்
பேகிங் பவுடர்






கேக், பிஸ்கோத்து, பக்கோடா, பூரி, குலாப் ஜாமூன் ஆகியவற்றை சுவைபட அதி மென்மையாகத் தயாரிக்க மிகவும் உதவுகிறது, ரெக்ஸ் பேகிங் பவுடர். சிறிதளவே சிறப்பாகச் செய்து முடிக்கிறது. அருமையான பொருள்களிலிருந்து மிகுந்த கவனத்துடன் பக்குவப் படுத்தப்பட்டிருப்பதால், பேகிங் பவுடர்களில் மிகவும் சிறந்தது ரெக்ஸ் பேகிங் பவுடர்.

### பக்குவ முறை:

2 கோப்பை மைதா
3 தேக்கரண்டி (தலிதட்டிய அளவு) ரெக்ஸ் பேகிங் பவுடர்.
1 கோப்பை சர்க்கரை
½ கோப்பை வெண்ணெ
1 கோப்பை பால்
4 மேசைக்கரண்டி (தலிதட்டிய அளவு) கோக்கோ.
½ தேக்கரண்டி உப்பு.
1 தேக்கரண்டி வனிலா எஸ்ஸென்ஸ்.
½ கோப்பை துருவிய தேங்காய்.
½ கோப்பை பொடியாக நறுக்கிய அக்ரோட்டு.

1. மைதா, உப்பு மற்றும் ரெக்ஸ் பேகிங் பவுடரை ஒன்றாகச் சேர்த்து சலித்து எடுக்கவும். வெண்ணெயையும் சர்க்கரையையும் விழுதுபோல் ஆக்கவும். கோக்கோவை சூடான சிறிது பாலுடன் கலந்து, விழுதாக்கிய வெண்ணெ-சர்க்கரையுடன் சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.
2. துருவிய தேங்காயை ஒரு தேக்கரண்டி நெய்யில் பொன்னிறமாகும் வரை வறுத்து எடுக்கவும். தயாரிக்கப்பட்டுள்ள மைதா, பேகிங் பவுடர், வெண்ணெ முதலிய கலவையுடன் தேங்காயை சேர்க்கவும். நன்றாகக் கிளறவும்.
3. அத்துடன் ½ கோப்பை நறுக்கிய அக்ரோட்டையும் வனிலா எஸ்ஸென்ஸையும் சேர்க்கவும். நன்றாகக் கலக்கவும். அதை நெய் தடவிய சிறு அச்சுகளில் ஊற்றவும். மிஞ்சியுள்ள அக்ரோட்டால் அதை அலங்கரிக்கவும். அடுப்பில் வைத்து 12-15 நிமிடங்கள் வரை வாட்டவும்.

OBM—1649 TM

உங்கள் சமையல் உன்னதமாக இருக்க உயர்ந்த சாமான்களையே உபயோகியுங்கள்.



கார்ன் பிராடக்ட்ஸ் கோ, (இந்தியா) பிரைவேட் லிட்.
ஸ்ரீ நிவாஸ் ஹவுஸ்,
எச். ஸோமானி மார்க், பம்பாய் 400001

நான்காம் அத்தியாயம்

## வேங்கித் தூதன்

ஜயந்தவர்மன் போய்விட்ட பிறகு புலிகேசி தன்னுடைய பிரதானிகளைப் பார்த்து, ''யானைக்கு ஒரு காலம் வந்தால் பூனைக்கு ஒரு காலம் வரும்' என்பது எவ்வளவு உண்மை, பார்த்தீர்களா? அந்தப் பல்லவ நரி கோட்டைக்குள் ஒளிந்து கொள்ளப் போக, இந்தப் பூனைப் பாண்டியனின் தலை ஒரேயடியாக வீங்கிப் போயிருக்கிறது. உத்தர பாரதத்தின் ஹர்ஷவர்த்தன சக்கரவர்த்திக்கும் மத்தியப் பிரதேசத்தின் வாதாபி சக்கரவர்த்திக்கும் இணையாகப் பூனைப் பாண்டியனும் தக்ஷிணதேச சக்கரவர்த்தியாக விளங்க வேண்டுமாம்! ஆசையைப் பாருங்கள், ஆசையை! காஞ்சிக்கோட்டை மட்டும் தகர்ந்து விழட்டும்; பிறகு இந்த அற்பனுக்கும் தக்க புத்தி புகட்டிவிட்டு வாதாபிக்குத் திரும்புவோம்!'' என்றான்.

இப்படிப் புலிகேசி சொல்லி முடிக்கும் தருவாயில் வேகமாகக் குதிரைகள் நெருங்கி வரும் சத்தம் கேட்டது. காஞ்சி முற்றுகையை நடத்திக் கொண்டிருந்த சளுக்க சேனாபதி அவசரச் செய்தியுடன் தூதர்களை அனுப்பியிருக்கிறார் என்றும், அவர்கள் வேங்கியிலிருந்து வந்த தூதன் ஒருவனையும் அழைத்து வந்திருப்பதாகவும் தெரிந்தது. தாமதமின்றி அவர்களைத் தன் முன்னிலையில் அழைத்து வரும்படி புலிகேசி சொல்ல, சேனாபதி அனுப்பிய தூதர்களின் தலைவனும் வேங்கிநாட்டுத் தூதனும் அழைத்து வரப்பட்டார்கள். வேங்கி நாட்டுத் தூதன் தன்னுடைய உடம்பெல்லாம் காயங்களுக்குக் கட்டுப் போட்டுக் கொண்டிருந்தான்.

# சிவகாமியின் சபதம்

அமரர் கல்கி





தூதர்கள் இருவரும் சக்கரவர்த்திக்கு அடிபணிந்து எழுந்த பிறகு, சேனாபதி தூதன், ''பிரபு! இவன் வேங்கியிலிருந்து முக்கியமான செய்தி அடங்கிய ஓலை கொண்டு வந்திருக்கிறான். காஞ்சிக்கு வரும் வழியில் இவனை வழி மறித்துச் சிலர் தடுக்க முயற்சி செய்தார்களாம். அவர்களுடன் சண்டையிட்டுத் தப்பித்துக் கொண்டு வந்தானாம். காஞ்சியிலிருந்து இங்கு வரும் மார்க்கத்தில் இவனுக்கு ஏதும் அபாயம் வரக் கூடாதென்பதற்காகச் சேனாபதி என்னையும் வீரர்கள் எழுவரையும் அனுப்பினார்'' என்றான்.

பிறகு, வேங்கியிலிருந்து வந்த தூதன் தன்னுடைய உடைவாளின் உறையில் பத்திரமாய் வைத்திருந்த ஓலையை எடுத்துப் பயபக்தியுடன் சக்கரவர்த்தியிடம் கொடுத்தான்.

புலிகேசி அதை வாங்கிக் கொண்டதும் சபையில் இருந்த லிகிதனின் முகத்தைப் பார்க்க, அவன் விரைந்து ஓடி வந்து பணிவுடன் ஓலையை வாங்கிப் படிக்கலானான்:

''திரிபுவன சக்கரவர்த்தி சத்ராச்ரய புலிகேசி மகாராஜருக்கு சகோதரன் விஷ்ணுவர்த்தனன் பக்தியுடன் எழுதும் லிகிதம்.

''தாங்கள் காஞ்சிக்குப் போய்ச் சேர்ந்த பிறகு எவ்விதச் செய்தியும் தங்களிடமிருந்து வரவில்லை. நான் பல முறை அனுப்பிய ஓலைகளுக்கும் மறுமொழி இல்லை. ஒருவேளை என் ஓலைகள் தங்களுக்கு வந்து சேரவில்லையோ என்று சந்தேகிக்கிறேன்.

''தங்களுடைய கட்டளைப்படி குரு பூஜ்யபாதரை வரவழைத்து விமரிசையாக மகுடாபிஷேகம் செய்துகொண்டேன். ஆனால், இன்னும் தொல்லைகள் தீர்ந்தபாடில்லை. வேங்கிப் படைகள் இன்னும் மலைப் பிரதேசங்களில் மறைந்து நின்று தொந்தரவு கொடுத்துக் கொண்டிருக்கின்றன. குடி படைகளும் கறுமுறு என்று இருக்கிறார்கள்.

''இன்னும் ஓர் அதிசயமான விஷயம்: மகேந்திர பல்லவருடைய சிறிய தந்தை மகன் புத்தவர்மன் எங்கிருந்தோ ஒரு பெரிய சைனியத்துடன் முளைத்திருக்கிறான். கிருஷ்ணை நதியின் தென்கரையில் இறங்கி நான் தங்களுக்கு உதவி செய்வதற்காகப் புறப்பட்டால் என்னைத் தடுக்கப் போவதாகக் கருவிக் கொண்டிருக்கிறானாம்.

''வேங்கி யுத்தத்தால் ஏற்பட்ட காயங்களால் நான் அடைந்த தேக அசௌக்கியம் இன்னும் தீரவில்லை. நாளுக்கு நாள் பலவீனம் அதிகமாகி வருகிறது. குதிரை ஏறக்கூட முடியாதவனாக இருக்கிறேன்.

''இதெல்லாவற்றையும் விட முக்கியமான விஷயம்: மகேந்திர பல்லவன் கோட்டைக்குள் ஒதுங்கிக் கொள்ளுவதற்கு முன்னால் உத்தரபாதச் சக்கரவர்த்திக்கு உதவி கோரி ஓலை அனுப்பினானாம். ஹர்ஷவர்த்தனர், தாங்கள் காஞ்சியிலும் நான் வேங்கியிலும் அகப்பட்டுக் கொண்டிருக்கும் இச்சமயம் பார்த்து, அசலபுரத்தின் மேலும் வாதா



பியின் மேலும் படையெடுக்கத் தீர்மானித்து விட்டதாக வதந்தி உலாவுகிறது. கன்யாகுப்ஜத்திலிருந்து சமீபத்தில் நாகார்ஜுன மலைக்கு வந்த ஒரு யாத்திரிகன் இவ்விதம் சொன்னான். அஜந்தா குகைகளையும் சித்திரங்களையும் பார்க்க வேண்டும் என்ற ஆசையினாலேயே ஹர்ஷவர்த்தனர் மேற்படி யோசனை செய்திருப்பதாக வதந்தியாம்.

''இந்த நிலைமையில் அடியேனுக்குத் தாங்கள் என்ன கட்டளை யிடுகிறீர்கள் என்பதைத் தெரிந்துகொள்ள ஆவலாய்க் காத்திருக்கிறேன். எது எப்படியிருந்தாலும், 'படையுடன் புறப்பட்டு வா' என்று கட்டளையிட்டால், உடனே புறப்படச் சித்தமாயிருக்கிறேன். என் அன்புக்குகந்த தமையனும் தந்தையும் குருவும் அரசனும் உற்ற நண்பனுமான தங்களுடைய வார்த்தையே எனக்குக் கடவுளின் கட்டளையைவிட மேலானது. என் உடல், பொருள், ஆவி அனைத்தையும் தங்கள் சேவையில் அர்ப்பணம் செய்ய எந்த க்ஷணமும் சித்தமாயிருக்கிறேன்.

''இன்னும் வெகு காலம் சந்தேகத்திலும் குழப்பத்திலும் என்னை விட்டு வைக்காமல், 'இன்னது செய்' என்று திட்டமாக ஆக்ஞை இடும்படியாக மன்றாடி வேண்டிக் கொள்கிறேன்.''



மேற்படி ஓலையை விகிதன் படித்து வந்தபோது, ஆரம்பத்திலே யெல்லாம் புலிகேசியினுடைய கண்களிலே அனல் பறந்தது. மந்திரத்துக்குக் கட்டுப்பட்ட நாகப் பாம்பு போல் அடிக்கடி பெருமூச்சு விட்டான். ஓலையின் கடைசிப் பகுதியைப் படித்தபோது, அவனுடைய கண்களிலிருந்து தாரை தாரையாகக் கண்ணீர் பெருகிற்று. "என் அருமைத் தம்பி விஷ்ணுவர்த்தனா! உன்னை மறுபடியும் எப்போது காணப் போகிறேன்!" என்று அலறினான்.

சபையில் வீற்றிருந்த தளபதி, பிரதானிகள் முதலியோர் யாரும் அவனுக்கு ஆறுதல் கூற முன்வரவில்லை. தாங்கள் ஏதாவது பேசினால் அதன் காரணமாக என்ன விபரீதம் நேருமோ என்னவோ என்று அனைவரும் கதி கலங்கிக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று புலிகேசி புலம்புவதை நிறுத்தி விட்டுக் கண்களைத் துடைத்துக்கொண்டு, சிம்ம கர்ஜனைக் குரலில், "இந்தப் படையெடுப்புக்கு நாள் பார்த்துக் கொடுத்த ஜோஸ்யன் யார்? இங்கே நம்முடன் வந்திருக்கிறானா?" என்று கேட்டான்.

"நம்முடன் வரவில்லை. வாதாபியிலேதான் இருக்கிறான்!" என்று பிரதானிகளில் ஒருவன் சொன்னான்.

"அப்படியானால் ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். வாதாபிக்குப் போனதும் முதற் காரியமாக அந்த ஜோஸ்யனை யானையின் காலால் இடறச் சொல்ல வேண்டும்!" என்றான் புலிகேசி.

அதே சமயத்தில் புலிகேசியின் கோபத்துக்கு இரையாவதற்காகவே கொண்டு வந்தது போல் ஒரு மனிதனை மேலெல்லாம் கயிற்றால் பிணைத்து, கூடாரத்துக்குள்ளே கொண்டு வந்தார்கள். புலிகேசி, "இவன் யார்? இவன் யார்?" என்று கர்ஜிக்க, காஞ்சியிலிருந்து வந்த தூதர் தலைவன், "பிரபு இவன் காஞ்சி ஒற்றன். நாங்கள் வரும்போது வழியிலே இவனைச் சந்தித்தோம். கட்டிப் பிடித்துக் கொண்டு வந்தோம்" என்றான்.

"ஆஹா! இந்தப் பாழாய்ப்போன பல்லவ இராஜ்யத்தில் ஒற்றர்களைத் தவிர வேறு யாருமே இல்லைபோல் இருக்கிறது. நல்லது. ஜோஸ்யனுக்குப் பிரதியாக இவனை யானையின் காலால் இடறச் செய்யுங்கள்!" என்றான் புலிகேசி.

அத்தகைய கடுமையான ஆக்ஞைக்கு உள்ளான மனிதன் நமக்கு ஏற்கெனவே தெரிந்தவன்தான். ஆனால், இப்போது பழைய முரட்டுப் பட்டிக்காட்டுக் குண்டோதரனாயில்லை. நாகரிகமான உடையணிந்திருந்தான். புலிகேசியின் ஆக்ஞையினால் அவன் அதிக மனக் கலக்கத்துக்கு உள்ளானவனாகத் தோன்றவில்லை!

## ஐந்தாம் அத்தியாயம்

# காஞ்சி ஒற்றன்

**வா**தாபிச் சக்கரவர்த்தி, குண்டோதரன் விஷயத்தில் நன்கு கவனம் செலுத்தாமலே, "இவனை யானையின் காலால் இடறச் செய்யுங்கள்!" என்று கட்டளையிட்டபோது அருகிலிருந்த வாதாபியின் ஒற்றர் தலைவன் மிக்க பணிவோடு, "அரசே! இவனைக் கொஞ்சம் விசாரணை செய்துவிட்டுப் பிறகு தண்டனையை நிறைவேற்றுவது நலம்" என்று தெரிவித்துக் கொண்டான்.

"ஆம், ஆம். ஏதோ ஞாபகமாகச் சொல்லி விட்டேன். அவனை இப்படி அருகில் கொண்டு வாருங்கள்" என்று புலிகேசி கட்டளையிடவும், குண்டோதரன் அருகில் கொண்டு வந்து நிறுத்தப் பட்டான்.

"அடே, நீ யார்? என்ன வேலையாகப் புறப்பட்டாய்? உண்மையைச் சொல்" என்று கேட்போர் உள்ளம் நடுங்கும் அதிகாரத் தொனியில் புலிகேசி வினவினான்.

வாதாபி மன்னன், சென்ற பதினெட்டு மாத காலத்தில் தமிழ் மொழியை நன்றாகப் பேசவும், பேசியதைத் தெரிந்து கொள்ளவும் பயின்றிருந்தான் என்பதை இந்த இடத்தில் நாம் குறிப்பிட வேண்டும். ஏற்கெனவே

# நேற்றுவரை குழந்தைகளுக்குக் கிட்டாதது
# இன்று உங்கள் குழந்தைக்கு—
# டெண்டெர் கேர்




## பேபி பவுடர் மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது




மென்மையான சருமத்திற்கென சரியாக பஃப்பர் செய்யப்பட்டது. உங்கள் அன்பும், ஆதரவும்தான் உங்கள் குழந்தைக்குக் கிட்டும் பெரும் பேறு. எதிலுமே மிகச் சிறந்தவற்றைத்தானே உங்கள் குழந்தைக்குத்தருகிறீர்கள்.

இதோ, உங்கள் அன்புக்கு ஒரு புதிய சின்னம்—டெண்டெர் கேர். புதிய பேபி பவுடர் இன்றைய விஞ்ஞான வளர்ச்சி தரும் பரிசு. நேற்று வரை வந்த பஃப்பர் செய்யப்படாத பவுடர்கள் குழந்தையின் மேனியைப் பண்படுத்தக் கூடும். ஆனால் புதிய டெண்டெர் கேர் சரியாக பஃப்பர் செய்யப் பட்டது. குழந்தையின் சருமம் சிவந்து போய் சில நேரங்களில் லேசாக புண்படுவது கூட உண்டல்லவா? இதெல்லாம் நேராமல் உங்கள் குழந்தையை டெண்டெர் கேர் பாதுகாக்கிறது. அதன் நிகரற்ற வியர்வை உறிஞ்சும் சக்தி உங்கள் குழந்தையை எப்போதும் வசதியாக, மகிழ்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

பட்டுப் போன்ற டால்க், மிதமான நறு மணம்—எல்லாமே அதில் கவனமாக சேர்க்கப் பட்டுள்ளன. உங்கள் குழந்தைக்காக. அதை 'டெண்டெர் கேர்' என்று அழைப்பதே அதனால்தானே.

வாதாபி இராஜ்யத்தில் வழங்கிய பாஷையானது பாதி தமிழ்ச் சொற்களைக் கொண்டிருந்தபடியால், தமிழ் மொழியைப் பயில்வதில் புலிகேசிக்கு அதிக சிரமம் ஏற்படவில்லை. புலிகேசி கேட்ட கேள்விக்கு விடையாகக் குண்டோதரன், ''ஐயா! நான் என் தாயாருடைய மகன். கொள்ளிடத்துக்கு அக்கரையில் திருவெண்காட்டுக்குப் போகலாம் என்று கிளம்பினேன். திருவெண்காட்டு வைத்தியரிடமிருந்து மருந்து வாங்கிக் கொண்டு வருவதற்காகப் போகிறேன்!'' என்றான்.

''எதற்கடா மருந்து! உனக்கு என்ன கேடு வந்துவிட்டது?'' என்று புலிகேசி கேட்டதும், குண்டோதரன் பயத்தினால் நடுங்கியவன் போலப் பாசாங்கு செய்து ''எனக்காக இல்லை, ஐயா! அம்மாவுக்கு மருந்து; என் தாயார் அவல் இடிக்கும்போது உரலை விழுங்கிவிட்டாள், அதற்காக!'' என்றான்.

இந்த விடை அங்கிருந்தவர்கள் சிலருக்குச் சிரிப்பை உண்டாக்கிற்று. புலிகேசியின் முகத்திலும் இலேசான புன்னகை தோன்றியது.

''என்னடா உளறுகிறாய்? உன் அம்மா உரலை விழுங்கினாளா?'' என்று அதட்டிக் கேட்டான்.

''இல்லை, உரலை விழுங்கவில்லை. உலக்கையைத்தான் விழுங்கினாள்!'' என்றான் அதிக நடுக்கத்துடன் குண்டோதரன்.

''உரலை விழுங்கினாளா, உலக்கையை விழுங்கினாளா? நிஜத்தைச் சொல்!'' என்று கோபமான குரலில் கர்ஜித்தான் புலிகேசி.

''இல்லை, இல்லை! என் அம்மாவை உரல் விழுங்கி விட்டது!'' என்றான் குண்டோதரன்.

''அடே, என்னிடம் விளையாடுகிறாயா? — உன்னை என்ன செய்வேன், தெரியுமா?''

''ஐயா! மன்னிக்க வேண்டும்! உங்களையெல்லாம் பார்த்தால் எனக்கு மிகவும் பயமாக இருக்கிறது. அதனால் மனத்திலே ஒன்று இருக்க, நாக்கு எதையோ சொல்கிறது.''

''இப்போது பயம் இல்லாமல் நிதானமாக யோசித்து உள்ளதை உள்ளபடி சொல்லு!''

''என் தாயார் அவல் இடித்த போது உலக்கை தவறிக் கையில் விழுந்து விட்டது. அதனால் அம்மாவின் கையில் காயம் ஏற்பட்டுவிட்டது. காயத்துக்கு மருந்து வாங்குவதற்காகத் திருவெண்காட்டுக்கு நமச்சிவாய வைத்தியரிடம் போகிறேன்.''

''இவ்வளவுதானே, வேறு ஒன்றும் இல்லையே? சத்தியமாகச் சொல்!'' என்று புலிகேசி கர்ஜித்தான்.

''ஆம், ஐயா! சத்தியமாகச் சொல்கிறேன். உலக்கைக்குத்தான் காயம் பட்டது!'' என்று குண்டோதரன் உளறினான்.

**வா**தாபிச் சக்கரவர்த்திக்குச் சிரிப்பு பீறிக் கொண்டு வந்தது. சற்று நேரம் விழுந்து விழுந்து சிரித்துவிட்டு, பக்கத்திலிருந்த ஒற்றர் தலைவனைப் பார்த்து, ''இந்தப் பைத்தியக்காரனை என்ன செய்கிறது?'' என்று கேட்டான்.

''சக்கரவர்த்தி! இவன் பைத்தியக்காரன் அல்ல. காரியப் பைத்தியமாகத் தோன்றுகிறது. மிக்க நெஞ்சழுத்தம் உள்ளவனாகக் காணுகிறான். இவனை வேறு விதத்தில் பரிசோதிக்க வேண்



டும்'' என்றான் வாதாபியின் ஒற்றர் தலைவன்.

குண்டோதரனைப் பிடித்துக் கொண்டு வந்திருந்த வீரர்களின் தலைவன் சக்கரவர்த்தியின் அருகில் நெருங்கி, ''பிரபு! இதோ இந்த ஓலை இவனைச் சோதித்த போது அகப்பட்டது'' என்பதாகச் சொல்லிவிட்டுக் கொடுத்தான்.

புலிகேசி அதை வாங்கி முன் போலவே அங்கிருந்த விகிதனிடம் கொடுக்க, அவன் ஓலையைப் படிக்கலானான்:

''மீனக் கொடியோனுக்கு ரிஷபக் கொடியோன் விடுத்த நிருபம். வடதேசத்துக் கடுவாய் உம்மைக் காண்பதற்காகக் கொள்ளிட நதிக்கு வந்திருப்பதாகத் தெரிகிறது. புலியின் ஆசை வார்த்தைகளில் மயங்கிவிட வேண்டாம். சேற்றில் அகப்பட்டுக்கொண்ட புலி, பிராமணனைத் தோத்திரம் செய்து



# அபூர்வ கண்காட்சி

தஞ்சாவூர்ப் பாணி தெய்வீகப் படங்களை உருவாக்குவது நுணுக்கமான, சிரமமான கலை. எண்பதாண்டை எட்டிப் பிடிக்கும் திரு டி. கோவிந்தராமானுஜம் இந்தச் சித்திரக் கலை நசித்துப் போகாமல் பாதுகாத்து வருபவர்களில் ஒருவர். ஸ்ரீபெரும்புதூர் கோவிலிலும் ஸ்ரீரங்கம் உடையவர் சந்நிதியிலும் இவரது ஆற்றல் பளிச்சிடக் காணலாம். இவரது நான்கு குமாரர்களும் கோபுரப் பதுமை வேலைப் பாடுகளில் விற்பன்னர்கள்.

"ஒரு படம் வரையப் பத்து நாட்களாகும். பெரிய படம் வரைவதற்கு ஒரு மாதமும் ஆகலாம். இந்தக் கலை கற்க இரண்டு வருஷங்கள் பயிற்சி தேவைப்படும்" என்கிறார் திரு கோவிந்தராமானுஜம். ஆனால் இவரது மாணவி ஸ்ரீமதி மீனா முத்தையா ஒரு வருஷத்துக்குள் இந்த ஆற்றலைப் பெற்று விட்டார். தமது சித்திரங்களைக் கண்காட்சியாக வைக்கும் அளவுக்குத் தேர்ச்சி பெற்று விட்டார்.

'நியூ வேவ்', 'மாடர்ன் ஆர்ட்' என்ற புதிய திருப்பங்களில் உலகம் திரும்பிக் கொண்டிருக்கும்போது இன்னொரு பக்கம் நமது பாரதப் பண்பாட்டின் பழஞ் செல்வங்களைப் போற்றிப் பாதுகாக்கச் சிலர் முன்வருவது மகிழ்ச்சிக்குரியது. இந்த அபூர்வப் பணியில் ஈடுபாடு கொண்ட ஸ்ரீமதி முத்தையா தம் அருமைக் கணவர் செட்டிநாட்டு இளவரசர் எம். ஏ. எம். முத்தையா நினைவுக்கு இந்தக் கண்காட்சியைக் காணிக்கையாக்கினார். இந்த அபூர்வ கண்காட்சியைக் காணக் கிறிஸ்துவ மத 'மதர்'களும் வந்திருந்தது மற்றோர் அபூர்வக் காட்சி!

---

ஏமாற்றிய கதை ஞாபகம் இருக்கட்டும். காஞ்சி ரிஷபத்தை வாதாபிப் புலியினால் ஒன்றும் செய்ய முடியாது என்பதை உறுதியாக நம்பவும். புலி சேற்றிலேயே கிடந்து பட்டினியால் செத்த பிறகு காஞ்சி ரிஷபத்துக்கும் மதுரையின் பெண் மானுக்கும் நீடித்த உறவு ஏற்பட இடம் இருக்கிறது. ஆனால் புலியின் பசியைத் தீர்க்க உதவி செய்தால் அது மதுரையின் மானுக்குத்தான் முடிவில் ஆபத்தாக முடியும். இதையும் மனத்தில் வைத்துக் கொண்டு உசிதப்படி நடந்து கொள்ளவும்."

இதை விசிதன் படித்து வரும்போதே வாதாபிச் சக்கரவர்த்திக்கு அதன் உட்கருத்து இன்னதென்று விளங்கிவிட்டது. கோபத்தினால் அவனுடைய உடம்பெல்லாம் நடுங்கிற்று. பற்களை அவன் நறநறவென்று கடித்துக் கொண்ட சப்தம் அருகில் இருந்தவர்கள் எல்லாரையும் நடுங்கச் செய்தது.

குண்டோதரன் சற்று முன்னால் பயந்தவன் போல் நடித்து 'உரல் உலக்கை' என்றெல்லாம் பேசியதையும் அதைக் கேட்டுத் தான் சிரித்ததையும் நினைத்த போது உண்டான அவமான உணர்ச்சியானது புலிகேசியின் கோபத்துக்கு இன்னும் தூபம் போட்டது.

"அடே ஒற்று! வாதாபிப் புலிகேசியுடனா விளையாடத் துணிந்தாய்? கொண்டு போங்கள் இவனை. இவனுடைய கண்களைப் பிடுங்கிவிட்டுக் கழுத்தை வெட்டிக் கழுகுகளுக்குப் போடுங்கள்!" என்று கர்ஜித்தான்.

இப்படிக் குரூரமான ஆக்ஞையிட்ட போது புலிகேசியின் தழல் போலச் சிவந்த கண்கள் குண்டோதரனை உற்று நோக்கின. அவ்விதம் நோக்கிய கண்களில் திடீரென்று கோபம் தணிந்து, அளவில்லா ஆச்சரியத்தின் அறிகுறி தென்பட்டது.

ஏனெனில், குண்டோதரனை வீரர்கள் இழுத்துக் கொண்டு போக முயன்ற போது அவனுடைய தலையானது விசித்திரமான சில சமிக்ஞைகளைச் செய்தது. உற்றுக் கவனித்த புலிகேசிக்கு, அந்தச் சமிக்ஞைகள் ஸ்வஸ்திகச் * சின்னத்தின் கோலமாக அமைந்தன என்பது தெரிய வந்தது. அதனாலேதான் அவனுடைய கண்களில் அத்தகைய வியப்புக் குறி தோன்றியது.

"நில்லுங்கள்!" என்று புலிகேசி மறுபடியும் கூவினான். "இந்த ஒற்றனிடம் நான் இன்னும் சில விஷயங்கள் கேட்க வேண்டும். இவனை இங்கே தனியாக விட்டுவிட்டு மற்றவர்கள் கூடாரத்துக்கு வெளியே போங்கள்!" என்று கட்டளையிட்டான். (தொடரும்)

---

*ஸ்வஸ்திகச் சின்னம் என்றதும் வாசகர்களுக்கு ஜெர்மனியின் நாஜிக் கட்சியின் சின்னமாக ஸ்வஸ்திகம் விளங்கியது ஞாபகம் வரும். ஆனால் ஹிட்லரைப் பார்த்துப் பூர்வீக இந்தியர்கள் காப்பியடிக்கவில்லை. அந்த நாளில் புத்தர்களும் ஜைனர்களும் சில சமயங்களில் ஸ்வஸ்திகச் சின்னத்தை உபயோகப் படுத்தினார்கள் என்பது சரித்திர ஆதாரம் பெற்ற விஷயம்.

"நீங்கள் நியூ யார்க் நகருக்குப் போகத் தேவையில்லை. எஸ்.ஆர்.எம் எக்ஸ்போர்ட் க்வாலிடி சூட்டிங்குகளைப் பெற."




# எக்ஸ்போர்ட் க்வாலிட்டி எஸ் ஆர் எம் துணிகள் இந்தியாவிலேயே கிடைக்கின்றன இப்போது.

வெளிநாட்டுத் தரமுள்ள எஸ்.ஆர்எம் சூட்டிங் துணிகள். கோடு போட்டவை, கட்டம் போட்டவை, பிளெயின். இயல்பான சாயல்களிலும் வேறுபட்ட வர்ணங்களிலும் வருபவை. பல வகைப்பட்ட பாலியெஸ்டர்-பருத்திக் கலப்பிலிருந்து தயாரிப்பு. உலகத் தரம் வாய்ந்தவை.

கிடைக்குமிடம்: உங்களூர் எஸ்.ஆர்எம் ஸ்டாக்கிஸ்டு.

## ஸ்ரீ ராம் மில்ஸ் லிட்

கண்பத்ராவ் கதம் மார்க், வொர்லி,
பம்பாய் 400 013.

Creative Unit-A 1234

# அரும்புகள்

அரவிந்தன்

ஹால் கடிகாரம் பதினேரு முறை அடித்தது!

கட்டிலில் படுத்துக் கொண்டே ஒன்று, இரண்டு, மூன்று என்று அதன் கூடவே மனத்துக்குள் எண்ணிக் கொண்டார் விசுவம்.

''விளக்கை அணையுங்களேன். என்ன படிப்பு?'' — அரைத் தூக்கத்தில் புரண்டு படுத்த கல்யாணி முணுமுணுத்தாள்.

மார்பின் மீது வைத்திருந்த கனத்த பைண்ட் புத்தகத்தைப் பக்கத்துக்கு அடையாளம் வைத்து விட்டு மூடினர் விசுவம்.

பத்ரி இன்னும் வீடு வந்து சேரவில்லை!

''காலேஜில் படிக்கிற பையனுக்கு இரவு பதினேரு மணி வரை வெளியே என்ன வேலை இருக்கும்?'' — தனக்குத் தானே கேட்டுக் கொண்டார் விசுவம்.

சட்டென்று மனத்தில் கனம் விழுந்தமாதிரி இருந்தது.

செலவுக்குக் கொடுக்கிற பணமும் அவனை ஒரு நண்பனுக நினைத்து நடத்துகிற மரியாதையும் — அவனையும் தனி மனிதனுகப் பாவித்து வழங்கிய சலுகைகளும் சுதந்திரமும் எல்லாமே ஓர் அடிப்படையில் தவறுகளோ?

அந்தக் காலத்தில் தம் அப்பா தன்னை வளர்த்த மாதிரியே இவனையும் வளர்த்திருந்தால் நன்ருக இருந்திருக்குமோ?—

விசுவம் விளக்கை அணைத்து விட்டுப் படுத்துக் கொண்டார்.

தூக்கம் வரவில்லை. புரண்டு படுத்தார்.

தஞ்சாவூர்ப்பக்கத்தில் கிராமத்து அக்ரஹாரம் தெருவில் கட்டுக் குடுமியுடன் பரிசாரகம் பண்ணிய அப்பாவுக்கு உதவியாக இரும்புக் கரண்டியுடன் கோட்டை அடுப்படியில் நின்று கொண்டிருந்த அந்தக் காலத்துத் தம் உருவத்தை நினைத்துப்பார்த்துக்கொள்ள வேண்டும் என்று ஆசைப்பட்ட உடனே அது பனிச்சென்று கண்ணில் நின்றது!

ஆனல் பெற்று வளர்த்த பிள்ளையின் உருவம்....?

விசுவம் புரண்டு படுத்தார்.

இன்று அவர் கிராமத்து விசுவம் இல்லை.

நிதி இலாகாவில் டெபுடி செகரட்டரி விசுவநாதன். சூட்டும், கோட்டும், பேண்டும் காரும் பங்களாவும் அந்தஸ்தும் கௌரவமும் ஆங்கிலமும் நாகரிகமும் படிந்த விசுவம். கட்டின பெண்டாட்டியைச் சிநேகிதியாகவும் பெற்ற பிள்ளையை நண்பனுகவும் நினைத்து நடத்தும் புதிய சித்தாந்தத்தை ஏற்றுக் கொண்டிருக்கும் விசுவம்...

வீட்டை விட்டு ஓடி வந்தபோது அவர் மனத்தில் இருந்த வாழ்வின் வெறியும் நிறைவேருத ஆசைகளும் சிதிலமான எண்ணங்களும் பிள்ளையின் வடிவில் பழி வாங்கிக் கொண்டிருக்கின்றனவா?

சட்டென்று எழுந்து உட்கார்ந்துகொண்டார் விசுவம்.





என்றைக்கும் இல்லாமல் மனம் கொஞ்சம் அதிகமாகவே சஞ்சலப்படுவதை உணர்ந்தார்.

கல்யாணி நிம்மதியாகத் தூங்கிக் கொண்டிருந்தாள். விளக்கைப் போட்டுவிட்டு ஜன்னலோரம் நின்று கீழே தெரிந்த வெறிச்சோடிய வீதியைப் பார்த்தார் விசுவம்.

நடமாட்டமே அற்றுப் போய்க் காலியாயிருந்தது பிரெஸிடென்ஸி ரோடு. பகல் முழுவதும் அழுது அடம் பிடித்த குழந்தை அமைதியாக உறங்குகிற மாதிரி இருந்தது!

டிஸ்டெம்பர் அடித்த சுவர்களில் வரிசையாகத் தொங்கிய பத்ரியின் படங்களைப் பார்த்தார். குழந்தையாக, சிறுவனாக, பள்ளிக்கூடம் போகிறவனாக, கிரிக்கெட் ஆட்டக்காரனாக, என். ஸி. ஸி. கேடட்டாக, மீசை முளைக்காத வாலிபனாக —

எவ்வளவு வளர்ச்சி?

கழுத்து பிடரிவரை வழியும் பரட்டைத் தலையும் மீசையும் கோணல் மாணலான டிஸைனில் சட்டையும் மனத்தை உறுத்தும் ஒரு கலரில் முட்டிக்குக் கீழே பாவாடை விரிப்பாய் ஒரு பேண்ட்டும் வழுக்கையான ஷூவும் — அந்தக் காலத்து ஜமீன்தார்களை நினைவூட்டும் பட்டையான பெல்ட்டும் தும்மும்பொழுதும் தூங்கும்பொழுதும்தவிரச் சதா முணுமுணுக்கும் ஹிந்திப் பாட்டும்—

வாசலில் ஸ்கூட்டரின் மெல்லிய ஒலி! எட்டிப் பார்த்தார் விசுவம்.

பத்ரி ஸ்கூட்டரை நிறுத்திவிட்டு அலட்சியமாகக் காலிங் பெல்லை அழுத்தினான்.

இரண்டு முறை. மூன்று முறை... சின்னதாக நீளமாக. பொறுமையின் எல்லைமீறல்களைப் பிரதிபலிக்கிறாற் போல் மணி ஒலித்தது!

நிதானமாகப் படிகளில் இறங்கிய விசுவம் சாவகாசமாகக் கதவைத் திறந்தார்.

''உஸ்'' — பெருமூச்சுடன் உள்ளே நுழைந்த பிள்ளையைக் கண்ணிமைக்காமல் பார்த்தார்!

காது மடல்களில் வழிந்து, கறுத்த மீசையைத்



தொட்டுவிடத் துடித்த 'ஸைட்பர்ன்ஸ்' புது ஜட்டம்!

(இதை இவ்வளவு நாட்களாகக் கவனிக்கவே யில்லையே!)

''ஒன் மினிட்!''

மாடிப் படிகளில் ஏறப் போன பத்ரி 'சட்'டென்று நின்று தந்தையைப் பார்த்தான். ''என்ன? என்ன டாட்!'' — பார்வையில் அலட்சியமும் அவசரமும் பொங்கின.

''இவ்வளவு நேரம் எங்கப்பா போனே?''

'கடகட'வென்று சிரித்தான் பத்ரி. ''என்ன டாட் இது? டிபிகல் வில்லேஜ் அப்பாக்கள் மாதிரி டயலாக்!''

''நான்சென்ஸ்!''

மீண்டும் படிகளில் ஏறப்போன பத்ரி 'சட்'டென்று நின்றான். முகம் வெளுத்து விட்டது.

''மணி என்ன தெரியுமா?''

''லெவன் தர்ட்டி!''

''அது எனக்கும் தெரியும். இவ்வளவு நேரம் எங்கே போனே?''

பத்ரி பதில் பேசாமல் கையில் இருந்த இரண்டு சினிமா டிக்கெட்டுகளை எடுத்து அவர் முகத்துக்கு நேராக நீட்டினான்.

இரண்டாவது டிக்கட்டுக்கு உரிய நபர் ஆணா, பெண்ணா என்ற கேள்வி விகவத்தின் முகத்தில் பளிச்சிட்டது. வாய் விட்டுக் கேட்பது நாகரிகக் குறைவு என்று எண்ணிக் கொண்டவராய், ''திஸ் ஈஸ் டூ மச்! ப்ளீஸ் ரெஸ்ட்ரிக்ட் யுவர் செல்ஃப்'' என்றார்.

''ஆஃப்டர் ஆல் சினிமா!''

''ஐ நோ தட்!''

''டேக் இட் ஈஸி டாட். உங்களுக்கு என் பேரில் நம்பிக்கை இருந்தால்...''

அவன் பார்வையில் இவ்வளவு கூர்மை எப்படி வந்தது? விகவம் அதிர்ந்துபோய் நின்றிருக்கும்போதே அவன் மாடிப் படிகளில் கால்களை அழுத்தி உதைத்துக் கொண்டு மெள்ள ஏறினான்.

அவன் போய் வெகு நேரம் வரையிலும் கூட ஹாலில் தனியாக நின்று கொண்டிருந்தார் விகவம். ரிஸல்ட் வரப்போகிறது என்ற பரபரப்புக் கொஞ்சம் கூட இல்லாமல் வெகு அலட்சியமாக ''பர்ஸ்ட் க்ளாஸிலே பாஸ் பண்ணுவேன்ப்பா. இல்லாட்டா ஸ்டேட் பர்ஸ்ட்டிலே பாருங்கோ'' என்று கூறும் அவ்வளவு கெட்டிக்காரனை ஒரு சினிமாவுக்குப் போய்விட்டுத் தாமதமாக வந்ததற்காகச் சண்டை பிடித்தால் அந்த 'இமேஜ்' பாழாகி விடுமே என்ற கவலை கூட அவருக்கு இருந்தது.

அவர் நிதானமாகப் படிகளில் ஏறினார். நெடு நேரம் தம் கட்டிலில் தூக்கம் வராமல் புரண்டார்.

இரண்டாவது டிக்கெட்... யாராக இருக்கும் என்று யூகிப்பதில் கொஞ்ச நேரம், பத்ரி அவ்வளவு தூரம் பாழாகி விடமாட்டான் என்ற நம்பிக்கையில் கொஞ்ச நேரம்; கல்யாணியின் கவலைகளில் நியாயம் இருக்குமோ இருக்காதோ என்று ஒரு மூன்றாவது மனிதனாய் நின்று நியாய அநியாயங்களை அலசுவதில் கொஞ்ச நேரம் என்று புரண்டு புரண்டு படுத்தபடியே யோசித்தார்.

கட்டிலில் கிடந்த தலையணையை அள்ளிச் செல்லமாக மார்போடு வைத்து அழுத்திக் கொண்டான் பத்ரி.

''லவ்லி டியர்....'' என்று முணு முணுத்தான். முதல் நாள் ஷோபாவோடு இன்டர்நேஷனல் தியேட்டரில் பார்த்த ஆங்கிலப் படத்தையும் கூடவே அவளும் தானும் ரகசியமாய் உணர்ந்த ஸ்பரிசங்களின் ஆனந்தத்தையும் வலிதில் நினைவுக்குக் கொண்டு வந்து அதை ஒவ்வொரு கணுவாய் நினைத்துப் பார்த்து அதன் தித்திப்பு சரம் சரமாய் இறங்க அதில் மயங்கிப் போய் லயித்துக் கிடந்தான்!

''ஷோபா டியர்'' — மெள்ள முணு முணுத்தான்.

தனக்கும் ஷோபாவுக்கும்காதல்—ஓ!—நட்பு! மலர்ந்த விதத்தை எண்ணிப் பார்த்துக் கொண்டான்.

''நோ அக்ரிமெண்ட். மேரேஜ்தான் காதலுக்குக் குறிக்கோள் என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்!''

''ஐ ட்டூ'' என்றாள் ஷோபா.

''வெரி குட்! நீ ரொம்ப இன்டலக்சுவல் அப்ரோச்சுடன் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கிறேன்.''

''ஐ ட்டூ!''

''வாட் டூ யூ மீன்?''

''நீங்கள் என்னிடம் எதையெல்லாம் எதிர்பார்க்கிறீர்களோ அதையெல்லாம் நானும் உங்களிடம் எதிர்பார்க்கலாமில்லையா?''

''ஓ, ஷ்யூர்!''

''அதைத்தான் சொன்னேன். இன்டலக்சுவல் அப்ரோச், சோஷல் மூவ்மெண்ட், டேக் இட் ஈஸி பாலிஸி — கோ கோ லேஸ்ப் ஐ லைக் இட்!''

''ஷோபா டியர்! இப்போதான் உன்னை நிஜமாக நிறைய எனக்குப் பிடிக்கிறது!''

''தேங்க்ஸ் பத்ரி!''

''ஷோபா! கல்யாணத்தைப் பற்றி நீ என்ன நினைக்கிறே?''

''நேஸ்ட்டி க்வெஸ்ட்சன்.''

''என்ன?''

''பின்னே என்ன? கொஞ்ச நேரம் முந்திக் காதலுக்குக் கல்யாணம் ஒரு குறிக்கோள் என்பதை நான் ஒப்புக் கொள்ள மாட்டேன்னு சொல்லிட்டு இப்போ அம்மாமி மாதிரி ஒரு கேள்வியைக் கேக்கறே.''

''நோ நோ. உன் அபிப்பிராயத்தைக் கேட்டேன்.''

''நோ ஒப்பினியன் அபௌட் இட்!''

''ஷோபா....!''

''பத்ரி....!''

''......''

புத்தம் புதிய மனமும் முற்றிலும் நாகரிக வளர்ச்சியும் மிகவும் நாசூக்கான பழக்கமும் கொண்ட அந்த ''நண்பர்கள்'' மிகவும் பழமையான ஒரு காரியத்தை நாகரிக மோகத்தில் செய்து கொண்டார்கள் அந்த இடைவெளியில்!

விடியா கண்களில் ஷோபாவின் வழுவழுப்பான முகம் ஒட்டிக் கொண்டது!

ஒருவழியாக மீண்டு வந்தான். மேலே வந்தான்.

அப்பா விகவம் ஆபீசுக்குப் போயிருந்தார்

கல்யாணி சமையலறைக்குள் ஒதுங்கியிருந்தாள்.

# அருள்மிகு பார்த்தசாரதி சுவாமி திருக்கோயில்

# திருப்பணி



ஆழ்வார்களால் மங்களாசாசனம் செய்யப்பெற்ற திருப்பதிகளிலே தனிப்பெருமை பெற்றது திருவல்லிக்கேணி. தொண்டைமான் என்னும் பழந்தமிழ் மன்னனின் வேண்டுகோளுக்கு இணங்கி, திருவேங்கடமுடையான் கண்ணபிரானாக, உருக்குமிணிப் பிராட்டியாருடன், அநிருத்தன், ப்ரத்தியும்னன், பலராமன், சாத்யகி ஆகிய தன் குடும்பத்தாருடன் சேவை சாதித்து அருள்புரிந்த தலம்.

இவ்வளவு சிறப்புமிக்க இத்திருக்கோயிலிலுள்ள இராஜகோபுரம் ஆனந்த விமானம், ஆளவந்தார் விமானம், உடையவர் விமானம், மணவாள மாமுனிகள், ஆண்டாள், வரதராஜர், திருமழிசை ஆழ்வார் விமானம், நரசிம்மசுவாமி ராஜகோபுரம் முதலியவற்றிற்கு ஜீர்ணோத்தாரண திருப்பணிக்கு சுமார் 2 லட்சம் ரூபாய் செலவாகுமென மதிப்பிடப்பட்டு, திருப்பணி வேலைகள் நடைபெற்று வருகிறது. இத்திருப்பணிக்கு அளிக்கும் நன்கொடைக்கு வருமான வரி விலக்கு உண்டு. மேலும் ரூபாய் ஆயிரம் அளிக்கும் அன்பர்களின் பெயர்கள் சலவைக் கல்லில் பொறிக்கப்படும்.

ஆகவே இதைக் காணும் ஆஸ்திகப் பெருமக்கள் அருள்மிகு பார்த்தசாரதியின் திருவருளுக்குப் பாத்திரமாகித் தங்கள் வாழ்க்கை ரதத்தைச் செவ்வனே ஓட்ட, கீழ்க்கண்ட முகவரிக்கு நன்கொடை அனுப்பி மகிழலாம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய முகவரி:

நிருவாக அதிகாரி,
**அருள்மிகு பார்த்தசாரதி சுவாமி திருக்கோயில்,**
**திருவல்லிக்கேணி, சென்னை - 600005.**

P. G. செங்கல்வராய செட்டி
*தலைவர், அறங்காவலர் குழு*
K. R. ஸ்ரீநிவாஸாசாரி, M. A.
நாதெள்ள ஆதிகேசவுலு குப்தா
*அறங்காவலர்கள்*

S. சோமசுந்தரம், B.A., B.L.,
நிருவாக அதிகாரி.





## போர்ஹென்ஸால் பல் துலக்கவும் அவளுக்குக் கற்பியுங்கள்.

**தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி,
ஈறுகளைத் தேய்த்துக் கொடுத்தால்,
ஈறு உபாதைகளையும் பற்சிதைவையும் தடுக்கலாம்.**

ஈறுகளை உறுதியுடனும் ஆரோக்கியத்துடனும் வைத்திருக்க அவற்றைத் தினமும் தவறாமல் தேய்த்துக்கொடுப்பது சிறந்த வழி என்று பல் வைத்தியர்கள் கூறுகிறார்கள். அது போலவே, பற்சிதைவைத் தடுக்கும் சிறந்த வழி, இரவிலும் காலையிலும், ஒவ்வொரு முறை உணவருந்திய பின்னும், தவறாமல் பிரஷ் கொண்டு பல் துலக்கி, பற்சிதைவைத் தோற்றுவிக்கும் உணவுத்துகள்களை அகற்றுவது.

உங்கள் குழந்தைக்கு போர்ஹென்ஸ் பழக்கத்தைக் கற்பியுங்கள். அதாவது, பல் வைத்தியரொருவரால் உருவாக்கப்பட்ட போர்ஹென்ஸ் பற்பசை கொண்டு, போர்ஹென்ஸ் டபிள்-ஆக்ஷன் ஜூனியர் டூத் பிரஷ்ஷால் தவறாமல் பல் துலக்கவும், ஈறுகளைத் தேய்த்துக் கொடுக்கவும் பழக்கப்படுத்துங்கள்.



## போர்ஹென்ஸ் பற்பராமரிப்பு பற்றிக் கற்பிக்க இதுவே தக்க வயது.

**போர்ஹென்ஸ்**
பல்
வைத்தியரால்
உருவாக்கப்பட்ட
பற்பசை

**இலவசம்!** "உங்கள் பற்களையும் ஈறுகளையும் பராமரிக்கும் முறை" என்னும் விவரமான வண்ணப் புத்தகம். இப் புத்தகம்* பெற (தபால் செலவுக்காக) 25 பைசா தபால் தலையுடன் இக் கூப்பனை "மேனர்ஸ் டென்டல் அட்வைசரி ப்யூரோ, தபால் பை 10031, பம்பாய்-1" என்னும் முகவரிக்கு அனுப்புக.

பெயர் ______________________ வயது ______ K.K.

முகவரி ______________________

*எந்த மொழியில் வேண்டுமோ, அதன் கீழ் கோடிடவும். ஆங்கிலம், இந்தி, மராத்தி, குஜராத்தி, உருது, பஞ்சாபி, வங்காளி, அஸ்ஸாமி, தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம்.

131F-182

குளியலறைக் கண்ணாடியில் முகத்தைப் பார்த்துக் கொண்டான். பட்டுப் போல வழுக்கிய கேசம். பம்மிய சைட் பர்ன்ஸ். சிவந்த உதடு.... நாகரிகம், நாகரிகம்.—

நாளுக்காகப் பல் தேய்த்தான். ஷவரில் கொஞ்சம் கொஞ்சமாக நனைந்து குளித்தான். குளிக்கும்போதே டிபன் சாப்பிட்டு விட்டு ஸ்கூட்டரில் எங்கெல்லாம் போக வேண்டும் என்று நினைத்துப் பார்த்துக் கொண்டான்.

'இஸ்கஸில்' ரஷ்யன் பாலே நடன நிகழ்ச்சி ஒன்றுக்கு அவனிடம் அனுமதி இருந்தது. மந்திரிகளும் அப்பாவும் கூட அதற்கு வர லாம் என்பதனால் அவன் அங்கே போவதை விரும்பவில்லை. வேறு எங்கே?

சினிமாவுக்கு!

ஷோபா சலித்துக் கொள்வாள்.

மெஜஸ்டிக் ஹோட்டலில் 'டிஸ்கொதே' போகலாம்.

போன வாரம் போய்விட்டுத் திரும்பும் பொழுது காரணமே இல்லாமல் ஷோபா வுடன் அவனுக்குச் சண்டை வந்து விட்டது. மூன்று நாட்கள் படாத பாடுபட்டு அவளைத் திருப்திப்படுத்த வேண்டியதாகி விட்டது.

ஹாய்யாக — தனியாக — இருக்க ஓர் இடம் இருக்கிறதா? கூட்டம், கூட்டம், கூட்டம்!

நாகரிகமே இல்லாமல் ஓர் ஆணும் பெண் ணும் கொஞ்சம் தனியாக இருந்தால் எட்டிப் பார்த்துத் திருட்டுத்தனமாக ரசிக்கும் நாக ரிகம் கெட்ட மனிதர்கள்! சே!

பத்ரி டிரஸ்ஸிங் டேபிளை விட்டு நகரும் வரையிலும் கூட ஓர் இடமும் தீர்மான மாகவில்லை. டிபன் டேபிளில் உட்கார்ந்து கொண்டும் யோசித்தான்.

''ம்!'' — சட்டென்று நிமிர்ந்தான். தன் 'மூடை'க் கலைத்துவிட்ட அம்மாவை வெறுப்புடன் பார்த்தான்.

''என்னடா பலமான யோசனை?''

அவளுக்குப் பதிலே சொல்லாமல் டிபன் சாப்பிட்டான்.

அவன் வெளியேபோகும்போது கல்யாணி, ''வெளியே சுத்தாதே, சீக்கிரம் வந்துவிடு!'' என்றாள்.

''என்னம்மா இது? அப்பா 'ஏன்டா லேட்?' என்று மிரட்டுகிறார். நீயானால் 'அட் வைஸ்!' பண்ணுகிறாய். என்ன ஆச்சு உங் களுக்கு? என்ன திடீர் மாற்றம்? நான் என்ன குழந்தையா?''

முதல் நாள் முதல் அடக்கி வைத்திருந்த உணர்ச்சிகளை வேகமாகவே கொட்டித் தீர்க் கிறவனைப் போல் 'படபட'வென்று கேட் டான் பத்ரி.

கல்யாணி கொஞ்சமும் எதிர்பார்க்காத அந்த எதிர்ப்பால் கொஞ்சம் அதிர்ந்துதான் போனாள்.

நாலைந்து முறை உதைத்து ஸ்டார்ட் ஆன ஸ்கூட்டரை வெறியுடன் கிளப்பி வேகமாக வெளியேறிய அவனை வெறித்துப் பார்த்த படி நின்றாள். அவள் மனத்திலும் ஆழ்ந்த பெருமூச்சு ஒன்று வடிந்தது.

''ஹாய்!'' — கையை உயர்த்தி ஆட் டிக் கொண்டே ஓடிவந்தாள் ஷோபா.

அவளைப் பார்த்த பிறகுதான் பத்ரியின் மனத்தில் இருந்த கசப்பு உணர்ச்சி கொஞ்சம்

## வீங்கிய பணம் வீங்காத ஜோக்!



□ ''எம்பா! ஒரு கப் காப்பிதானே சாப்பிட்டேன், நாற்பது பைசா பில் போட்டிருக்கிறியே?''

''ஆமாம் சார்! காகித விலையெல்லாம் ஏறிப் போச்சு!''

''காகிதத்துக்கும் காப்பிக்கும் என்னப்பா சம் பந்தம்?''

''இல்லாதா என்ன? நீங்க சாப்பிட்ட காப்பிக்கு முப்பத்தி அஞ்சு பைசா. நான் கொடுத்த பில்லுக்கு அஞ்சு பைசா. ஆக மொத்தம் நாற்பது பைசா!''



□ ''என்ன மாமி! உங்க பொண்ணுக்குத் தை மாதம் கல்யாணமாமே?''

''ஆமாம். எப்படியோ கஷ்டப்பட்டு மூன்று லட்சம் சேர்த்து விட்டோம். இன்னும் இரண்டு லட்சம் மாரிடமாவது கடன் வாங்கி ஏதாவது ஒரு கோவிலில் வைத்து சிம்பிளாகக் கல்யாணத்தை முடித்துவிட வேண்டியதுதான்!''



□ ''ஏன் சார், தலை வழுக்கையாவதற்கு ஏதாவது தைலம் இருந்தால் கொடுக்கிறீர்களா? முடி வெட்டிக் கொள்வதற்கு மாதா மாதம் பணம் கொடுத்துக் கட்டுப்படியாகவில்லை.''

-எஸ். என். ராஜாராம்

வடிந்து மனம் சமாதானம் அடைந்தாற் போல இருந்தது.

'டிஷ்யூ' சால்வார் கம்மீஸில் அவள் ஒரு ரோஜா மலரைப் போல இருந்தாள்.

''யூ லுக் நைஸ் டுடே!''

''ரியலி?''

அவள் ஒரு குழந்தையைப் போல நின்று அழகு காட்டினாள். பத்ரியின் மனத்தில் ஆனந்தம் வழிந்தது. அவளை அப்படியே அந்த ஜன நெரிசலின் மத்தியில் உயரத் தூக்கிக் கொண்டு ஓட வேண்டும் போல் இருந்தது. நாசூக்காகப் பின் ஸீட்டில் அமர்ந்து அவன் இடுப்பை வளைத்து அணைத்துக் கொண்டாள் ஷோபா.

'ஸ்சக்'கென்று ஸ்கூட்டர் கிளம்பியது.

''யூ நாட்டி. இப்படி வண்டியை எடுக்காதே என்று எவ்வளவு தடவை சொல்லியிருக்கேன். அப்பா! என் நெஞ்சே வலிக்கிறது!''

''ஸாரி டியர்! கியர் சரியா விழலே!''

தௌஸண்ட் லைட்ஸ் ரோஜா ரோடு திருப்பத்தில் ஆட்டோமாடிக் சிக்னலுக்கு நின்றிருந்த வண்டிகளோடு அவனும் நின்றான்.

''இன்றைக்கு எங்கே?''

''எங்கேயானாலும் சரி, நான் சீக்கிரம் வீடு திரும்ப வேண்டும். நேற்றைக்கே அப்பா கோபித்துக் கொண்டார்.''

''ஓ! உன் வீட்டிலுமா?''

''அப்போ உன் வீட்டிலும் நடந்ததா?''

''ஆமாம்!'' — பத்ரியின் மனத்தில் பழைய கசப்பு உணர்ச்சி மீண்டும் பரவியது. வலுவில் அதை மாற்றிக்கொள்ளத் துடியாய்த் துடித்தான்.

சிக்னல் கிடைத்து வண்டிகள் திருவிழாவில் விட்ட சர வாணங்களாய்ச் சீறிக் கிளம்பின.

''எங்கே போறே?''

''கொஞ்சம் சப்தமாகப் பேசு. காதில் விழவில்லே.''

''பெட்டர் கோ ட்டு அன் இயர் ஸ்பெஷலிஸ்ட்!''

''என்ன?''

''கத்தரிக்காய்! வண்டியை நிறுத்து!''

''நடு ரோட்டிலா? சீப் கான்ஸ்டேபிள் என்னைக் கொன்றுவிடுவான். அவனிடம் இரண்டு முறை இதே இடத்தில் மாட்டிக் கொண்டிருக்கிறேன். அப்பாவின் பெயரைச் சொல்லித் தப்பித்தாகி விட்டது. இன்னொரு தடவை அகப்பட்டுக் கொண்டால் என்னை நசுக்கியே விடுவான்!''

நேக்தாஜி சர்க்கிளைச் சுற்றி ஜஸ் பார்லர் கடை ஓரமாக அவன் வண்டியை நிறுத்தினான்.

இரண்டு கப் ஐஸ்கிரீமுக்கு ஆர்டர் பண்ணிவிட்டு அவன் அவளைப் பார்த்தான்.

காலையில் அவன் நினைத்தாற் போலவே அவள் அவன் சொன்ன ஒவ்வோர் இடத்தையும் அலட்சியமாக ஒதுக்கினாள்.

''பின்னே எங்கேதான் போகலாம்? நீதான் சொல்லேன்.''

''எனக்குத் தெரியாது!''

''நீயாகவும் சொல்ல மாட்டாய். நான் சொன்னாலும் வேண்டாம். வேறு என்னதான் செய்யலாம் என்கிறாய்?''

''பேசாமல் வீட்டுக்குப் போகலாம்.''

பத்ரிக்கு அந்தப் பதில் கோபமாகவும், ஏமாற்றமாகவும் இருந்தது. பில்லைக் கொடுத்துவிட்டு வெளியே வந்தும் அவர்கள் அங்கேயே நின்று கொண்டிருந்தார்கள்.

அவள் பஸ்ஸையும், கார்களையும் பெண்களையும் வேடிக்கை பார்த்துக் கொண்டு நின்றாள். பத்ரிக்கு அவள் அப்படி இருப்பதே எரிச்சலூட்டியது.

வண்டியைக் கிளப்பினான்.

''எங்கே?''

''நோ ஐடியா.''

''நான் வரவில்லே.''

''என்ன ஷோபா இது? குழந்தையைப் போல! பத்ரி திகைத்துப்போய் நின்றான். அவளுக்கு எல்லாமே 'போர்' அடிக்கிறது. இந்த நாகரிகமும், அவன் நட்பும் அவனோடு இருப்பதுமே போர் அடிக்கிறதோ!

''ஒருவேளை நானே உனக்கு 'போர்' அடிக்கிறேனா?''

''எக்ஸாக்ட்லி!''

''ஷோபா!''

''ஆமாம். இப்படியெல்லாம் ஃபூலிஷாகப் பேசிக் கொண்டிருந்தால் வேறு என்னதான் சொல்வதாம்?''

மனத்தின் மென்மையான இடத்தில் சவுக்கால் அடிபட்டது மாதிரி இருந்தது. முட்டாள்தனமாக.... முட்டாள்தனமாக... ஒரு பெண்ணின் நட்புக்காக—

அவன் எப்படி யெல்லாம் அவமானப்பட வேண்டி இருக்கிறது!

மனத்தில் இலேசாகக் கசப்பு உணர்ச்சி பரவியது.

''வரப் போகிறாயா இல்லையா?''

''எங்கே?''

''எங்கேயோ. நான் போகிற இடத்துக்கு!''

''நீ போகிற இடத்துக்கெல்லாம் கூடவே வரவேண்டும் என்பதற்கு நான் என்ன, உன் பெண்டாட்டியா?''

அவள் ஹாஸ்யமாகச் சிரித்துக்கொண்டே விளையாட்டுக்காகத்தான் அதைக் கேட்டாள்.

பத்ரியின் முகம் அவள் பதிலில் வாடிவிட்டது. மனமும் கூட!

அவன் விசுக்கென்று வண்டியைக் கிளப்பிக்கொண்டு அம்புபோல் பாய்ந்தான்.

அவன் அப்படித் தன்னைத் தனியே விட்டுச் செல்வான் என்று கொஞ்சமும் எதிர்பார்க்காத ஷோபா திகைத்துப் போய் நின்றாள்.

டிராபிக் நெரிசல் உள்ள சாலைகளிலும் வெறி பிடித்தவனைப் போல ஓட்டிக் கொண்டு வந்த பத்ரியின் மனத்தில் மீண்டும் மீண்டும் அவள் கேள்வியே சுழன்றது.

அவள் அவன் மனைவி இல்லைதான். அவள் தன்னோடு பழகியது 'ஜஸ்ட் லைக் தட்!' முறையில்தான். அவளுக்கு அது எளிதாகக்கூட இருந்திருக்கலாம். ஆனால் — அவன்...

வெகு தூரம் வந்து விட்ட பிறகு அவன் வண்டியைக் காலியாக இருந்த ஒதுக்குப்புறமான ஒரு திருப்பத்தில் நிறுத்திவிட்டு இறங்கி நின்று கொண்டான். வெய்யிலும் வியர்வையும் கூட ஷோபா அருகில் இருக்கும்பொழுது தெரியாத மாதிரியும் இப்போது தான் அதிகம் தெரிகிற மாதிரியும் அவன் உணர்ந்தான். அருகில் இருந்த கேஸ்பமரியா

வினுள் நுழைந்தான். ஒரு கப் காப்பிக்கு ஆர்டர் கொடுத்தான்.

தென்னிந்தியர்களாகத் தோன்றிய நடு வயதைக் கடந்த ஒருவரும், மடிசார் கட்டிக் கொண்டு ஒரு மாதும் உள்ளே நுழைந்து அவன் எதிரில் உட்கார்ந்து கொண்டார்கள்.

''என்ன சாப்பிடறே?'' — அவர் கேட்டார்.

''எனக்கு என்ன தெரியும்? நீங்களே சொல்லுங்கோ!''

அவர் காப்பிக்கு ஆர்டர் பண்ணிவிட்டு அவளைப் பார்த்தார். ''போதும்'' என்றாள் அவள் திருப்தியுடன்.

பத்ரி இமை கொட்டாமல் அவர்களையே பார்த்தான். அவர் காதில் தொங்கிய சிவப்புக் கடுக்கன், சம்மர் கிராப்புத் தலை, தொள தொளத்த சட்டை....

அந்த மாது அடக்கமாக உட்கார்ந்திருந்த விதம். அவர் கேள்விக்குப் பதில் சொன்ன குரல்....பத்ரிக்குச் சம்பந்தமே இல்லாமல் தன் அப்பா அம்மாவின் நினைவு வந்தது.

இன்றைக்கும் அப்பாவின் விருப்பத்துக்கே தன்னை முழுமையாகச் சமர்ப்பித்துக் கொண்டு விட்ட அம்மா, புடவைக் கடையில் இருந்து நாலைந்து புடவைகளை அள்ளிக் கொண்டு வந்து அப்பாவிடம் காட்டி அவர் எதைச் சொல்கிறாரோ அதைக் கட்டிக் கொள்ளும் அம்மா, இன்றைக்கும் டைனிங் டேபிளில் அவர் இருக்கும்போது ஒவ்வொரு பதார்த்தத்தையும் பரிமாறிவிட்டு அவர் அதைச் சாப்பிடும் விதத்திலிருந்தே அவர் ருசியின் தேவைகளைத் தீர்மானித்துக் கொண்டு ''சப்ஜியில் உப்பு கம்மியோ?'' என்று கேட்கும் அம்மா — எங்கேயும் எதிலும் அப்பாவுக்கே முதலிடம் கொடுக்கும் அம்மா!—

அவன் மனம் சிலிர்த்துக் கொண்டது. சின்ன விஷயத்தில்கூட ஒற்றுமையாய் இருக்க முடியாத தன்னையும் ஷோபாவையும் நினைத்துக் கொண்டான்.

நாடகத்தை வெறுக்கிற ஷோபா! அவன் அன்பை ஒரு விளையாட்டாக நினைக்கிற ஷோபா! வக்கரித்துக் கொண்டு விட்டால் தான் ஜெயிக்க வேண்டும் என்று நினைக்கிற ஷோபா — ஓர் ஆளுகையை எதிர்க்கிற ஷோபா... தன்னை அடிமைப்படுத்தி எப்போதும் நான், நான், நான் என்றே எழுந்து நிற்கிற ஷோபா... மிகவும் அற்பமான விஷயங்களில் கூடக் கோபித்துக் கொண்டு அப்படிக் கோபித்துக் கொள்வதன் மூலமே தனது முக்கியத்வத்தை அவனுக்கு அதிகம் உணர்த்த முயன்ற ஷோபா...

பத்ரியின் கண்களில் தானும் அவளும் அந்த ஐஸ் பார்லரின் வெளியில் வெகு நேரம் ஒருவருக்கொருவர் முரண்பட்டுக் கொண்டு இருந்தது நினைவுக்கு வந்தது.

அவன் ஸ்கூட்டரை ஸ்டார்ட் செய்தான். எங்கே போவது? வீட்டுக்கே போய்விடலாமா? நிதானமாக ஸ்கூட்டரை ஓட்டிக் கொண்டு போனான்.

பிரஸிடென்ஸி ரோடு துவக்கத்தில் அவர்கள் வீட்டுக் கார் நின்று கொண்டிருப்பதைப் பார்த்தான். பானெட்டைத் தூக்கி வைத்து விட்டு டிரைவர் இன்ஜினுக்குள் எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தான்.




அமெரிக்க டெலிவிஷனுக்கும் ரஷ்ய டெலிவிஷனுக்கும் என்ன வித்தியாசம் என்று நடிகர் பாப் ஹோப்பிடம் கேட்கப்பட்டபோது அவர் சொன்ன பதில்:

''டெலிவிஷன் என்பது அமெரிக்காவிலும் உண்டு, ரஷ்யாவிலும் உண்டு. ஆனால் ஒரு வித்தியாசம். அமெரிக்காவில் டெலிவிஷனை நீங்கள் பார்க்கலாம். ரஷ்யாவில் டெலிவிஷன் உங்களைப் பார்க்கும்.''

-கண்ணன்

கைக்குட்டையால் விசிறியபடி அம்மா உள்ளே உட்கார்ந்திருந்ததையும் அவன் பார்த்தான். அவன் ஸ்கூட்டரை வளைத்துக் கார் அருகில் கொண்டு போய் நிறுத்தினான்.

''கடை வீதிக்குக் கிளம்பினேன். கார் ரிப்பேராகி விட்டது. பத்ரி! வாயேன். கொஞ்சம் புரொவிஷன் ஸ்டோர் வரைக்கும் போய் வந்து விடலாம்!''

அம்மா பின்னால் உட்கார்ந்து கொண்டாள். பத்ரி ஸ்கூட்டரை ஓட்டினான்.

''ஜாக்கிரதையாப் பிடிச்சுக்கோம்மா!''

''ஆகட்டும்டா. நீ மெதுவாப் போ!''

ஷோபாவை உட்கார வைத்துக் கொண்டு வண்டியை ஓட்டுவதை விட அம்மாவை உட்கார வைத்துக் கொண்டு போவதில் ஒரு கௌரவம் இருந்ததாக இப்போது அவனுக்குத் தோன்றியது.

காரில் வந்திருந்தால் அம்மாவுக்கு டிரைவர் எல்லா வேலையையும் செய்து விடுவான். இப்போது ஸ்கூட்டரில் வந்திருந்ததால், பத்ரியே எல்லாம் செய்ய வேண்டியிருந்தது.

அலுக்காமல் பைகளைத் தூக்கிக் கொண்டு அவனுடன் நடந்தாள்.

அம்மாவே பலமுறை வாய்விட்டு அவனைப் பாராட்டினாள். அப்பா அவன் பேரில் கவலையோடு இருப்பதாகச் சொன்னாள். அவர்கள் எதிர்பார்ப்புகளின் பேரில் அவனுக்கு நியாயமான பொறுப்புக்கள் இருப்பதை ஒரு சிநேகிதியைப் போல் மனம் விட்டுக் கூறினாள்.

அவை அவனுக்கு 'போர்' அடிக்கவில்லை.

ஸ்டோரில் இருந்து திரும்பி வீட்டுக்கு வந்து சேர்ந்த பிறகும் அவன் இதையே நினைத்துக் கொண்டிருந்தான்.

நாகரிகம், கல்வி, அந்தஸ்து, என்ற எந்தப் பெயரிலும் தான் என்ற சுயத்துவத்தை இழந்துவிட நான் தயாராக இல்லை. நான்-நானாக இருக்கவே விரும்புகிறேன் என்று அவன் மனதுக்குள் சொல்லிக் கொண்டான்.

முரண்பாடுகள் மனிதனுக்கு விதிவிலக்கில்லை. இது ஆரம்பம்தான்! இது போதுமே!

# பொன்னியின் புதல்வர்



## 3. பிறந்த ஊர்

எங்கோ உள்ள ஏதோ ஓர் ஊர்
எப்போதேனும் யாரேனும்
ஒருவரால் எல்லோருக்கும்
தெரிந்த ஊராகும்.

கல்கி பிறந்த ஊர் புத்தமங்கலம். தஞ்சை மாவட்டத்தில் மாயூரத்திலிருந்து எட்டு மைல் தூரத்தில் அந்தக் கிராமம், தன் அழகான பெயருக்கு ஏற்ப அழகான தோற்றத்தோடிருக்கிறது.

எத்தனையோ ஊர்களின் பெயர்களைத் தமது கதைகளிலும் கட்டுரைகளிலும் பதித்துப் புகழுடன் நிலைபெறச் செய்த கல்கி, தம் சொந்த ஊரின் பெயரை ஏனோ எதிலும் குறிப்பிடவில்லை. 1948-யில் ஒரு சிறு பத்திரிகையில் வெளியான பேட்டிக் கட்டுரை ஒன்றில், தாம் பிறந்த ஊரை அவர் குறிப்பிட்டார் என்பது உண்மையே. ஆனால் அவர் குறிப்பிட்ட ஊரின் பெயர் மணல்மேடு. அது தவறில்லை யாயினும் துல்லியமானதல்ல. பல தெருக்களும், கடைகளும், தபால் நிலையமும் கொண்ட மணல்மேட்டுடன், இரண்டு தெருக்கள் மட்டுமே கொண்ட புத்தமங்கலம் இணைப்பானதே யாயினும், அது அரை மைல் தள்ளியுள்ள தனியான ஊரே. இரண்டுக்கும் இடையே இயற்கை வரம்புகளோ செயற்கைத் தடுப்புக்களோ இல்லாமல் வயல்களும் தோப்புகளும் தொடர்ச்சியாகவே இருந்த போதிலும், அவை தனித் தனி கிராமங்களே யாகும். ஒன்றிலிருந்து மற்றொன்றுக்குப் போக, நடைபாதைகளுடன் கச்சா வண்டிப் பாதையும் உண்டு.

இந்த வரலாற்றின் நாயகர் பிறந்து வளர்ந்த சூழலை ஆராய்வதற்காக, புத்தமங்கலத்தையும் அக்கம் பக்கத்து இடங்களையும் நூலாசிரியன் சுற்றிப் பார்த்த போது, அவற்றின் தோற்றங்கள் பலவற்றை, அப்படி அப்படியே தமது கதை கட்டுரைகள் சிலவற்றில் கல்கி வர்ணித்திருப்பது நினை

சுந்தா





● புத்தமங்கலம் அக்ரஹாரம் ● அய்யனார் கோயில்

வுக்கு வந்தது. அந்த வர்ணனைகளையே இங்கே தொடுத்துக் கொடுத்தால் போதும்; பாலப் பருவம் முதல் திரும்பத் திரும்பக் கல்கி கண்டு மனத்தில் பதித்துக் கொண்ட காட்சிகளை, அவருடைய புலன்கள் மூலமே, அவருடைய மொழியின் மூலமே வாசகர்கள் காணும்படி செய்யலாம். அத்துடன், தாம் கண்டதையும் அனுபவித்ததையும் அவர் எப்படி எழுத்திலே வடித்தளித்தார் என்பதையும் காணச் செய்யலாம் அல்லவா?

''மயிலைக் காளை'' என்பது, எழுத்தாளர் கல்கியின் தொடக்க காலச் சிறுகதைகளில் ஒன்று. அதில், அவருடைய கிராமத்துக்கு இரண்டு மைல் தொலைவிலுள்ள காட்சி ஒன்று பதிவாகி யிருக்கிறது:

கொள்ளிடத்துக்கும் இராஜன் வாய்க்காலுக்கும் மத்தியிலுள்ள அடர்ந்த காட்டில் மாடுகள் மேயும். காடு என்றதும் வானளாவிய விருக்ஷங்களையும் புலிகளையும் கரடிகளையும் எண்ணிக் கொள்ள வேண்டாம். நான் சொல்லும் கொள்ளிடக்கரைக் காட்டில் மூன்று ஆள் உயரத்துக்கு மேற்பட்ட மரம் ஒன்றும் கிடையாது. ஆனாலும் காடு காடுதான். முட் புதர்களும், மற்றச் செடி கொடிகளும் அடர்ந்து மனிதர் பிரவேசிப்பது அசாத்தியமா யிருக்கும். அபூர்வமாய் அங்கு மிங்குமுள்ள ஒற்றையடிப் பாதை வழியாய் ஒருவன் உட்புகுந்து விட்டால், அவனைத் தேடிக் கண்டுபிடிப்பது பிரம்மப் பிரயத்தனம் தான். பாம்புகள், கீரிகள், நரிகள் ஆகியவை தாம் இந்தக் காட்டில் உள்ள துஷ்டப் பிராணிகள்.

''கள்வனின் காதலி'' நாவலில் முத்தையன் தலைமறைவாய்த் திரிந்த காடும் அதுதான். அந்தக் காடும் அதைச் சுற்றியுள்ள இடங்களுந்தாம் அந்த நாவலின் பிரதான களங்கள்.

இராஜன் வாய்க்கால் பகுதியின் வசந்தகாலத் தோற்றம்:

ஜலம் வறண்ட இராஜன் வாய்க்கால் மணல்; இருபுறமும் அடர்த்தியான புன்னை மரங்கள் ... சித்திரை பிறந்து சில நாட்கள் தாம் ஆகி இருக்கின்றன. மரஞ் செடி கொடிகளில் எல்லாம் தளதளவென்று பசும் இலைகள் தழைத்துக் கண்ணுக்குக் குளிர்ச்சி

● ஆஞ்சநேயர் கோவில் ● மாரியம்மன் கோவில் ● சிவன் கோவில் (புகைப்படங்கள்: ராமகிருஷ்ணு









அளிக்கிறது. அவற்றின் மேல் இளந்தென்றல் காற்று தவழ்ந்து விளையாடிக் கொண்டிருக்கிறது. ஒரு வேப்ப மரம் பூவும் பிஞ்சுமாய்க் குலுங்கிக் கொண்டிருக்கிறது. அந்த மரத்தின் அடர்த்தியான கிளைகளில் எங்கேயோ ஒளிந்து கொண்டு ஒரு குயில் 'கக்கூ' 'கக்கூ' என்று கூவிக் கொண்டிருக்கிறது.

அதே இடம் ஆடி மாதத்தில் வேறு விதமாய்த் தோற்றம் அளிக்கிறது:

மேலக் காற்று விர் விர் என்று அடித்துக் கொண்டிருக்கிறது. மரங்களின் கிளைகள் அந்தக் காற்றில் படும் பாட்டைச் சொல்லி முடியாது. நாலா பக்கமிருந்தும் 'ஹோ' என்ற இரைச்சல் சத்தம் எழுகிறது... புது வெள்ளம் இரு கரைகளையும் தொட்டுக் கொண்டு சுழிகள் நுரைகளுடன் அதிவேகமாய்ப் போய்க் கொண்டிருக்கிறது. நாற்றங் கால்களில் இளம் நாற்றுக்கள் கொழு கொழுவென்று பசுமையாய்ப் படர்ந்திருக்கின்றன. அப் பயிரின்மீது சில சமயம் காற்று வேகமாய்ச் சுழன்று அடிக்கும்போது, வித விதமான சுழிகளும் கோலங்களும் தோன்றி மறைகின்றன.

அந்திப் பொழுதில் அந்த இடம் எப்படி மாறுகிறது என்பதைப் பார்ப்போம்:

நதியில் பூரணப் பிரவாகம் ஓடிக் கொண்டிருக்கிறது. நீர் ஓட்டத்தின் 'ஹோ' என்ற இரைச்சலும், படுகையிலிருக்கும் மூங்கில் மரங்கள் உராயும் சத்தமும், மேலக் காற்றின் கோஷமும், தூரத்தில் நரியின் ஊளையும், நாயின் குலைப்பும் கலந்து பயங்கரமாகத் தொனிக்கின்றன. கண்ணுக்கெட்டிய தூரம் தண்ணீர் மயமாய் இருக்கும் பிரவாகத்தின் காட்சியும், மேல்மேலும் வந்து கவியும் இருளும், மேற்கு திக்கில் ஓடி ஒளிந்து கொண்டிருக்கும் மங்கிய ஒளியும், மரங்களின் நிழலும்பயங்கரத்தை மிகைப்படுத்துகின்றன.

(புது ஓவர்சியர் - சிறுகதை)

இனி தை மாத அறுவடைக் காலத்தில் அந்தக் கிராமப்புறம் அளிக்கும் தோற்றம்:

சென்ற மாதம் வரையில் பசுமை நிறம் பொருந்தி விளங்கிய வயல்கள் எல்லாம் இப்போது பொன்னிறம் பெற்றுத் திகழ்கின்றன. நெற் கதிர்களின் பாரத்தால் பயிர்கள் வயல்களில் சாய்ந்து கிடக்கின்றன. காலை நேரத்தில் அவற்றின் மீது படிந்திருக்கும் பனித் துளிகள் மீது சூரியக் கிரணம் படுங்கால், எண்ணிலடங்காத வெண் முத்துக்கள் சிதறிக் கிடப்பதுபோல் தோன்றுகிறது. வயல் வரப்புகளில் நடந்து போனால் பசும் புல்லில் படிந்திருக்கும் பனித் துளிகளில் கால் படும்போது ஜில்ஜில்லுவென்று வெகு சுகமாயிருக்கிறது. சில வரப்புக்களில் துவரஞ் செடிகள் செழிப்பாக வளர்ந்திருக்கின்றன. அந்தச் செடிகளில் சிலுசிலுவென்று பூத்திருக்கும் சின்னஞ் சிறு பூக்களுக்குத்தான் என்ன அழகு!

இன்னும் சில வரப்புக்களில் சேம்புச் செடிகள் அடர்த்தியாக வளர்ந்திருக்கின்றன. அவற்றின் இலைகளுக்கு என்ன மிருதுத் தன்மை! அந்த இலைகளின் மீது அப்படியும் இப்படியும் ஊசலாடிக் கொண்டிருக்கும் பனித் துளிகளை நாளெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தாலும் அலுக்காது. ஆனால் அந்தத் துளிகள்தாம், நேரம் ஆக ஆக, வெயில் ஏற ஏற, மாயமாய் மறைந்து போகின்றன.

. கதிர்கள் நன்கு முற்றிவிட்ட வயல்களில் அதிகாலையில் ஆட்கள் இறங்கி அறுக்கத் தொடங்குகிறார்கள். அப்படி அறுவடையாகும் நிலங்களிலிருந்து கம்மென்று புது வைக்கோலின் மணம் வீசுகிறது.

(கள்வனின் காதலி)

''கள்வனின் காதலி'' நாவலின் தொடக்கத்தில் கல்கி வர்ணித்துள்ள பூங்குளம் கிராமம், அநேகமாய்ப் புத்தமங்கலம் போன்றதே. அந்தக் கிராமத்தைப் பற்றிய வர்ணனையில், புத்தமங்கலத்துக்கு முற்றிலும் பொருந்தும் பகுதிகளை மட்டும் பார்ப்போம்:

... ஆடி ஆவணி மாதங்களில், குளங்களிலும் ஓடைகளிலும், வாய்க்கால்களிலும் வயல்களிலும், தண்ணீர் நிறைந்து ததும்பி அலைமோதிக் கொண்டிருக்கும். எங்கெங்கும் ஜலமயமாகவே காணப்படும்.

இந்த ஊருக்கென்று அவ்வளவு புஷ்பங்களும் எங்கிருந்து வந்து சேர்ந்தனவோ தெரியாது. குளத்தைத் தாண்டி அப்பால் போனோமோ இல்லையோ, கொன்றை மரங்களிலிருந்து சரம் சரமாய்த் தொங்கும் பொன்னிறப் புஷ்பங்கள் கண்ணைக் கவர்கின்றன.

குளத்தைத் தாண்டிச் செல்லாமல் அதன் அருகிலேயே நின்று பார்த்தால்:

அது குளமா அல்லது புஷ்பக் காடா? மலர்க் குலத்துக்கு ஒரு சக்கரவர்த்தி உண்டு என்றால் அது செந்தாமரைதான் என்பதில் சந்தேகமில்லை. எத்தனை பெரிய பூ! அதுவும் ஒன்றிரண்டு; பத்து இருபது அல்ல... ...அவை தலைதூக்கி நிற்கும் கம்பீரந்தான் என்ன! சௌந்தரிய தேவதை செந்தாமரைப் பூவைத் தன் இருப்பிடமாய்க் கொண்டதில் வியப்பு உண்டோ?

இன்னும் பல பூக்களின் அழகைப் பார்க்க வேண்டும் என்றால் சிவன் கோவில் பக்கம் போக வேண்டும்.

கோவில் பிராகாரத்தின் மதிலை அடுத்தாற்போல் வளர்ந்திருக்கும் பன்னீர் மரங்களிலே அந்தப் பன்னீர்ப் புஷ்பங்கள் எவ்வளவு அழகாயிருக்கின்றன! பச்சைப் பசேலென்ற இலைகளுக்கு மத்தியில், இந்த வெண்ணிறப் பூக்கள் எப்படிச் சோபிக்கின்றன! அடுத்தாற் போலிருக்கும் பவள மல்லி மரத்தையும், அதன் அடியில் புஷ்பப் பாவாடை விரித்தாற்போல் உதிர்ந்து கிடக்கும் பவள மல்லி மலர்களையும் பார்த்து விட்டாலோ, ஏன் அப்பால் போவதற்கே நமக்கு மனம் வருவதில்லை ...

அதோ நந்தியாவட்டைச் செடிகளில் கொத்துக் கொத்தாகப் பூத்திருக்கும் வெண்ணிறப் பூக்கள் கண்ணைப் பறிக்கின்றன. அந்தப் புறத்தில் செம்பருத்திச் செடிகளும், வேலி ஓரம் நெடுகக் கொங்கு மந்தாரையும், இந்தண்டைப் பக்கம் முழுதும் மல்லிகையும் முல்லையும் பூத்துக் குலுங்குகின்றன.

சிவன் கோவிலிலிருந்து பெயர்ந்து பெருமாள் கோவிலை நோக்கிச் சென்றால், அங்கே:

அதன் பக்கத்திலிருக்கும் மாமரத்தில், பட்டுப் போல் சிவந்த இளம் இலைகளுக்கு மத்தியில், கொத்துக் கொத்தாக மாம் பூக்கள் பூத்திருக்கின்றன. அந்தப் பூக்கள் இருக்குமிடந் தெரியாதபடி வண்டுகளும் தேனீக்களும் மொய்த்துள்ளன. சற்றுத் தூரத்தில் ஒரு முட் புதரின் மேல் காட்டு மல்லிகைக் கொடி ஒன்று படர்ந்திருக்கிறது. அந்தக் கொடியில் குலுங்கும் பூக்களிலிருந்து இலேசாக வந்து கொண்டிருக்கும் நறுமணத்தினால் கவரப்பட்டுத்தான், போலும் அதன் மேல் அத்தனை பட்டுப் பூச்சிகள் பறந்து கொண்டிருக்கின்றன. அவற்றின் இறகுகளுக்குத்தான் எத்தனை விதமான நிறங்கள்!

கிராமத்துக்கு வெகு அருகே மண்ணியாறு ஓடுகிறது. அதன் கரையில், கல்கி வாலிபப் பருவம் அடைகிறவரை, ஒரு பெரிய ஆலமரம் நின்றது. பின்னர் அது ஒரு புயல் காற்றில் விழுந்து விட்டது. பல வருடங்களுக்குப் பிறகு, அதை நினைத்துக் கொண்டு கல்கி எழுதினார்:





**வால்மீகி தமிழர்!**

வால்மீகி என்பவர் தமிழர். வடநாட்டு மக்களுக்குத் தமிழ் கற்பிக்கச் சென்ற அவர், ராமாயணம் எழுதினார்.

இரால் போன்ற செந்நிறத்தை உடையவனாதலால் இராவணன் என்று பெயர் பெற்றான்.

இதுபோன்ற புதுமையான ஆராய்ச்சி(!)களை நீங்கள் மேலும் படிக்க விரும்பம் கொண்டிருக்கிறீர்களா? தமிழக அரசு வெளியிடும் ''தமிழரசு'' பத்திரிகையின் 16-6-74 இதழில் ''மயக்கம் வேண்டாம்'' என்ற கட்டுரையைப் படித்துப் பாருங்கள்; மயங்கி விழுவீர்கள்! - ''சேலம் தர்மசக்ரா''

---

எங்கள் ஊர்ப் பள்ளிக்கூடத்தின் அருகில், சாலை ஓரத்தில், ஆலமரம் ஒன்று வானோங்கி வளர்ந்திருந்தது. அதன் கிளைகள் நாலாபுறமும் விசாலமாகத் தழைத்து விழுது விட்டு நெடுந்தூரம் பசுமையாகப் படர்ந்து குளிர்ந்த நிழலைத் தந்து வந்தன. வெயில் காலத்தில் மத்தியான நேரத்தில் ஆயிரக் கணக்கான பட்சிகள் அந்த ஆல மரத்தில் தங்கி விதம்விதமான குரல்களில் இன்ப கீதம் இசைத்துக் கொண்டிருக்கும். ஊதாச் சிவப்பு நிறம் வாய்ந்த ஆலங்கனிகள் முழுசாகவும், பட்சிகளால் பாதி கொத்தித் தின்னப் பட்டவையாகவும் தரையெல்லாம் உதிர்ந்து கிடக்கும் காட்சி கண்களுக்கு விருந்தாயிருக்கும்.

மத்தியான நேரத்துக்குப் பள்ளிக்கூடம் விட்டதோ இல்லையோ, பிள்ளைகள் எல்லாரும் இந்த ஆல மரத்தடியை நாடுவோம். கொஞ்ச நேரத்திற்கு அங்கே குதிப்பும் கொம்மாளமுமாய்த்தான் இருக்கும். பிள்ளைகளுடைய குதூகலமான சிரிப்பின் கலகல த்வனியானது பறவைகளின் இனிய குரலோசையுடன் கலந்து நாலு திசைகளிலும் பரவி, அக்கரையிலிருந்த கோவில் மண்டபத்தில் எதிரொலியை உண்டாக்கும்.

இந்த ஆலமரம் இருந்த இடமானது இப்போது வெறுமையாயிருக்கிறது என்பதை எண்ணும் போதே என் கண்களில் நீர் துளிக்கிறது. (கட்டுரை - கல்கி இதழ் 16 - 5 - '42)

புத்தமங்கலம் கிராமத்தில் நன்செய் நிலங்கள் இருநூறு ஏக்கர்; புன்செய் நாற்பது ஏக்கர். அவற்றைக் கவனித்துக் கொள்ளும் குடியானவர்கள், சுமார் நாற்பது வீடுகள் கொண்ட நேர் வரிசைத் தெரு ஒன்றில், ஆடு மாடு கோழிகளை வளர்த்துக்கொண்டு வசிக்கிறார்கள். அந்தத் தெருவில் மாரியம்மனுக்கும் அய்யனாருக்கும் கோயில்கள்.

குடியானவர் தெருவுக்குத் தெற்கே, கீழ் மேலாய் அமைந்திருக்கிறது அக்கிரஹாரம். அதில், பாழடைந்த வீடுகள் போக, குடியிருப்பு உள்ள வீடுகள் பதினைந்துதான்; கல்கி பிறந்து வளர்ந்த காலத்தில் அவ்வளவாய்ப் பாழ்மனைகள் இல்லையாம். எல்லாமே ஓடு போட்ட வீடுகள்; மாடி வீடு ஒன்று கூடக் கிடையாது. அவற்றில் வசிப்பவர்கள் சொற்ப



## ஐந்து ஆண்டுகள் எரியும் பாட்டரி விளக்கு

''பாட்டரி லைட்'' பாட்டரி அடிக்கடி தீர்ந்து விடுகிறது. விளக்கு எரியாமல் வெறுமனே இருக்கும்போது கூடப் பாட்டரி சக்தி வீணாகிப் போகிறது. நீண்ட காலம் பயன்படுத்தாதிருந்தால் அரித்துப்போய் விடுகிறது.

இனி இந்தத் தொல்லை இல்லை. விண்வெளித் தொழில் நுட்பத்தின் பயனாகக் கிடைத்திருக்கும் மின் கைவிளக்கு மிகவும் புதுமையானது. அதன் மின் கலத்துக்கு ஐந்து ஆண்டு எரியும் ஆற்றல் உள்ளது. 10 மணி நேரம் முதல் 20 மணி நேரம் வரையிலும் இடையறாமல் எரிந்து கொண்டிருக்கக் கூடியது. இப்புதுமை ''ஃபினாஷ் லைட்'' அமெரிக்காவில் விற்பனைக்கு வந்திருக்கிறது.

---

நிலபுலன்கள் உள்ளவர்கள். மிராசுதார் என்று இப்போதும் யாரும் இல்லை; எப்போதும் இருந்ததில்லை.

அக்கிரகாரத்தின் மேலக் கோடியில் வரதராஜப் பெருமாள் கோயில் கொண்டுள்ளார். அந்தப் பெருமாளைச் சேவித்த வண்ணம், கீழ்க் கோடியில் ஒரு சிறு கோயிலுக்குள்ளே பக்த ஆஞ்சநேயர் நிற்கிறார். ஆஞ்சநேயர் ஆலயத்தை அடுத்து அமைந்திருக்கிறது புராதனமான சிவன் கோயில். அதில் அபிராமி சுந்தரி சமேதராய்க் கிருபாலநாதர் காட்சி தருகிறார். மூன்று கோயில்களிலும் மூன்று வேளைப் பூஜை ஒழுங்காய் நடக்கிறது. விசேஷ உற்சவங்களும் சீராய் நடக்கின்றன.

கல்கி குடும்பத்தாருக்குக் குலதெய்வம், வினைதீர்த்த வைத்தியநாதர். தையல்நாயகியுடன் அவர் கொலுவிருக்கும் கோயிலின் பெயரும், அந்தக் கோயில் அமைந்துள்ள ஊரின் பெயரும், வைத்தீசுவரன் கோயில் என்று ஒன்றாகி விட்டது. சீகாழி வட்டத்திலுள்ள அந்த ஊருக்குப் பல புராணக் கதைகளையொட்டி, புள்ளிருக்குவேளூர், சடாயுபுரி, கந்தபுரி, அம்பிகாபுரம் என்றெல்லாம் மாற்றுப் பெயர்கள் உண்டு. தருமை ஆதீனத்தின் பராமரிப்பில் உள்ள இந்தக் கோயிலைப் பற்றி, ''வினைதீர்த்தான் கோயில் விளக்கழகு'' என்பதாக ஒரு பழமொழி. விளக்கழகு மட்டுமின்றி, கோபுர அழகு, மதிலழகு, சிற்ப அழகு, எல்லாவற்றிற்கும் மேலாகத் தூய்மை அழகும் பொருந்தியது இது. ஞானசம்பந்தர், நாவுக்கரசர், அருணகிரிநாதர், குமரகுருபரர் முதலானோர் இந்தத் தலத்தின் மகிமையைப் பாடியிருக்கிறார்கள்.

கல்கி பிறந்த ஊருக்கு எட்டு மைல் தொலைவில் உள்ள இந்தத் தலம், மற்றொரு பாடல் பெற்ற தலம். புத்தமங்கலத்துக்கு அருகேயே இருக்கிறது. இதன் பெயர் மண்ணிப் படிக்கரை — மண்ணி ஆற்றின் அருகே இது இருப்பதால். தலத் தரு இலுப்பை மரம் என்ற காரணத்தால், இலுப்பைப் பட்டு, மதூகவனம் என்றும் அதற்குப் பெயர்கள் உண்டு. திருவாவடுதுறை ஆதீனத்திற்கு உட்பட்ட இந்த ஆலயத்தை அணுகுகையில், இலுப்பைப் பூவின் மணம் மனத்தைச் சொக்கி, பழம் பெரும் காலத்துக்கே நம்மை இழுத்துச் செல்கிறது. பஞ்சபாண்டவர்கள் தமது அஞ்ஞாத வாசத்தை இங்கே முடித்துக் கொண்டு சிவலிங்க பூஜை செய்தார்கள் என்பதாக ஐதிகம். பஞ்சபாண்டவர்களும் பாஞ்சாலியும் துதித்ததாய் உள்ள ஆறு தனித்தனி கோயில்கள் இங்கே இருக்கின்றன.

அஞ்ஞாத வாசத்தின்போது அருச்சுனன் வாளை ஒளித்து வைத்த திருவாள் ஒளிப்புத்தூரும் புத்தமங்கலத்துக்கு அருகே இருக்கிறது. அருகேயுள்ள மற்றும் ஒரு புனிதத் தலம் திருப்பங்கூர். பெரியபுராணத்தின் மூலம், அதைவிட அதிகமாய், கோபால கிருஷ்ணபாரதி இயற்றிய நந்தனார் சரித்திரக் கீர்த்தனை மூலம், எல்லாருக்கும் தெரிந்த ஊர். இங்கேயுள்ள ஆலயத்தின் வெளியே நின்றுதான் சிவலோக நாதனைச் சேவிக்க முடியாமல், ''வழி மறைத்திருக்குதே மலைபோலே ஒரு மாடு படுத்திருக்குதே'' என்று நந்தனார் புலம்பினார். அதைக் கேட்டு மனமிரங்கிய சுவாமி, ''சற்றே விலகியிரும் பிள்ளாய் சந்நிதானம் மறைக்குதாம்'' என்று நந்திக்குக் கட்டளை இட்டார்.

திருப்புங்கூரிலிருந்து நந்தன் வழி நடந்த தில்லை வரையிலும் அதற்கு அப்பாலும், வேறு வேறு திசைகளிலும், அருகேயும் தொலைவிலும், சிறிதும் பெரிதுமாய் எண்ணிலாக் கோயில்கள். தமிழ் நாட்டிலுள்ள கோயில்களையெல்லாம் எண்ணிப் பார்த்தால், அவற்றின் மொத்தத் தொகையில் பாதி, தஞ்சை மாவட்டத்தில் இருக்கக் காணலாம்.

தஞ்சையில் சிறிதும் பெரிதுமாய் வளைந்தும் நெளிந்தும் ஓடுவதெல்லாம் பொன்னியின் புனலே. அந்தப் புனலின் வளத்தால் எழுந்த இயற்கை எழில் காட்சிகளையும், பண்டையச் சோழர்கள் முதலாகப் பலருடைய பக்தி வளத்தால் எழுந்த தேவாலயங்களையும், அவற்றினிடையே பிறந்து வளர்ந்த கல்கி, கண்டு கண்டு களித்திட்டார். அவற்றை எழுத்திலும் வடித்தார். இக் காலத்தில் அவர் பார்த்த காட்சிகள் இருக்கட்டும்; பொன்னி நதி பாயும் பிரதேசத்தின்

காட்சிகளை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், வல்லவரையன் வந்தியத்தேவன் கண்டவாறு சற்றே பார்ப்போம் :

வெண்ணிறக் கொக்குகள் மந்தை மந்தையாகப் பறந்தன. செங்கால் நாரைகள் ஒற்றைக் காலில் நின்று தவம் செய்தன. மடைகளின் வழியாகத் தண்ணீர் குபுகுபுவென்று பாய்ந்தது. நல்ல உரமும் தழை எருவும் போட்டுப் போட்டுக் கன்னங் கரேலென்றிருந்த கழனிகளின் சேற்றை உழவர்கள் உழுது பண்படுத்தினார்கள். பண்பட்ட வயல்களில் பெண்கள் நடவு நட்டார்கள். நடவு செய்து கொண்டே, இனிய கிராமியப் பாடல்களைப் பாடினார்கள்.

.... குடிசைகளின் கூரைகளின் வழியாக அடுப்புப் புகை மேலே வந்து கொண்டிருந்தது. அடுப்புப் புகையுடன் நெல்லைப் புழுக்கும் மணமும், கம்பு வறுக்கும் மணமும், இறைச்சி வதக்கும் நாற்றமும் கலந்து வந்தன. அக்காலத்தில் போர்வீரர்கள் பெரும்பாலும் மாமிச பட்சிணிகளாகவே இருந்தார்கள். வல்லவரையனும் அப்படித்தான். எனவே அந்த மணங்கள் அவனுடைய நாவில் ஜலம் ஊறச் செய்தன ...

மாரியம்மன் முதலிய கிராம தேவதைகளை மஞ்சத்தில் எழுந்தருளப் பண்ணிக் கொண்டு பூசாரிகள் கரகம் எடுத்து ஆடிக் கொண்டும், உடுக்கு அடித்துக் கொண்டும் வந்து நெல் காணிக்கை தண்டினார்கள்....

வீட்டுக் கூரைகளின் மேல் பெண் மயில்கள் உட்கார்ந்து கூவ, அதைக் கேட்டு ஆண் மயில்கள் தோகையைத் தூக்க முடியாமல் தூக்கிக் கொண்டு ஜிவ்வென்று பறந்து போய் அந்தப் பெண் மயில்களுக்குப் பக்கத்தில் அமர்ந்தன.

புறாக்கள் அழகிய கழுத்தை அசைத்துக் கொண்டு அங்குமிங்குமாகச் சுற்றின.

பாவம்! கூண்டுகளில் அடைபட்ட கிளிகளும் மைனாக்களும் சோக கீதங்கள் இசைத்தன.

இப்படிப்பட்ட காட்சிகளையெல்லாம் பார்த்துக் களித்துக் கொண்டு வந்தியத்தேவன் குதிரையை மெல்லச் செலுத்திக் கொண்டு சென்றான்.

(பொன்னியின் செல்வன் பாகம் 2 அத்தியாயம் 14)

பொன்னி நதியின் படைப்புக்களும், பொன்னி நாட்டுக் கலைஞர்களின் படைப்புக்களும், கல்கியின் படைப்புக்கள் பலவற்றில், காட்சி அளிக்கின்றன — எல்லாவற்றிலும் அதிகமாய் ''பொன்னியின் செல்வன்'' எனும் மாபெரும் படைப்பில். அதிலே பொன்னியும் அதன் கிளைகளும் இலக்கிய ஆறுகளாய் ஓடுகின்றன. அவற்றின் ஊடே நிகழ்பவை எல்லாம் இலக்கிய நிகழ்ச்சிகள்; காண்பவையெல்லாம் இலக்கியக் காட்சிகள். பொன்னியின் புதல்வரே படைத்திருக்கக் கூடிய அந்த நூல், பொன்னி நாட்டின் வரலாற்று இலக்கியம் மட்டும் அல்ல; அந் நாட்டின் வர்ணனை இலக்கியமும் ஆகும்.

(தொடரும்)

•வட்டமேஜை•

# மாற்றுக் கொள்கை; மாறாத அன்பு

கல்கி பத்திரிகையில் வெளி வரும் அரசியல் சம்பந்தப்பட்ட செய்திகள், கட்டுரைகள் முதலியவை நான் ஏற்றுக் கொண்ட கொள்கைகளுக்கு முற்றிலும் முரண்பட்டவை. இருப்பினும் அவை எழுதப்படும் விதம் மிகவும் அருமையாக உள்ளன. எனவேதான் வரிக்கு வரி நான் எதிர்த்தாக வேண்டிய அரசியல் செய்திகள் கல்கியில் இருந்தும்கூட, கல்கி படிப்பதை என்னால் நிறுத்த முடியவில்லை. மிகச் சிறந்த கருத்தாழம் மிக்க கதைகள், நாவல்கள் வெகு அழகிய நடையில் எழுதப்பட்டுக் கல்கியில் வெளியாவதை என் சொல்லிப் புகழ்வது? இன்று குடும்பத்தில் கூச்சமின்றி உரத்த குரலில் ஒருவர் படிக்க முடிந்த தமிழ்ப் பத்திரிகை கல்கி ஒன்றுதான் என்பது எனது திடமான கருத்து.

அவ்வகையில், கல்கிப் பத்திரிகைக்கே மகுடமிட்டதுபோல், 'பொன்னியின் புதல்வர்' இருக்கும் என்பது என் எண்ணம். தமிழுக்குச் சிறுகதைகள், நாவல்கள், சரித்திர நெடுங்கதைகள் முதலியவைகளை அளித்துத் தமிழால் தானும் வளர்ந்து தன்னால் தமிழும் வளரக் கண்ட ஒரு யுக புருஷரைப் பற்றிய இத்தொடர் பல இலட்சம் வாசகர்களுக்கு மகிழ்வளிக்கும்.

ராணிப்பேட்டை — ம.வெ. சதாசிவன்
26—7—74 — காரியதரிசி, பண்பாட்டுக்கழகம்

## பள்ளியில் மதிய உணவு

ஆரம்பப் பள்ளிகளில் மதிய உணவுத் திட்டத்தின்கீழ் ஓர் உணவுக்குப் பத்து பைசா வீதம் 1953ம் ஆண்டிலிருந்து செலவிடப்பட்டு வருகிறது. பொருள்களின் விலையோ அன்று விற்றதற்கும் இன்று விற்பதற்கும் ஒன்றுக்கு நான்கு மடங்கு கூடிவிட்டது. எனவே இப்போதும் பத்து பைசாவில் (அரசாங்கம் கொடுப்பது ஆறு பைசா. பொதுமக்கள் நன்கொடை நான்கு பைசா.) உணவு வழங்க வேண்டும் என்பது மிகவும் சிரமமாக உள்ளது. எனவே எங்களின் (தலைமை ஆசிரியர்களின்) சிரமங்களை உணர்ந்து தமிழக அரசு மதிய உணவு மானியம் அதிகப்படுத்திக் கொடுக்க வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறோம்.

சங்ககிரி — ஏ. சுப்பிரமணியம்
26—7—74 — தலைமைஆசிரியர்.

# திருடர்கள்

ர. சு. நல்லபெருமாள்

## 5. நீதிமன்றத்தின் தரம்

நளினியும் சம்பத்தும் சாப்பிடுவதற்காக ஆவுடையப்ப பிள்ளையின் அலுவலகத்துக்குள் சென்ற போது, அவர்களுக்கு முன்பே அங்கு சென்றிருந்தார், ஆவுடையப்பபிள்ளை. வழக்கு சம்பந்தமாகச் சட்டப் புத்தகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார். ஒரு கையால் வழுக்கைத் தலையை ரசித்துத் தடவிக் கொண்டிருந்தார். ஆழ்ந்த சிந்தனையிலோ அல்லது படிப்பிலோ இருந்தால், அவருடைய கை, வழுக்கைத் தலையைத் தடவிக் கொள்ளும்.

''இன்றைக்கு உனக்குச் சாப்பாடு இங்கேயா?'' என்று சம்பத்தைப் பார்த்துக் கேட்டார்.

''சார்! சர்க்கரைப் பொங்கல் வந்திருக்கும். நீங்களும் எங்களோடு சாப்பிட வாருங்களேன்'' என்று கூப்பிட்டாள் நளினி.

''எனக்குக் கோதுமைக் கஞ்சி. வந்த உடனேயே குடித்து முடித்து விட்டேன்'' என்றார் ஆவுடையப்ப பிள்ளை.

''ஐயோ பாவம்'' என்றான் சம்பத், அனுதாபத்துடன்.

''எதற்குப் பரிதாபப்படுகிறாய்?'' — வியப்புடன் கேட்டார், பிள்ளை.

''சம்பாத்தியம் பண்ணியும் அனுபவிக்க முடியவில்லை'' என்றான் சம்பத்.

''அவனவனுக்கு வாய்க்க வேண்டும். என்னைப் பார்த்துப் பொறாமைப்படுகிறார்கள். சர்க்கரைப் பொங்கலைச் சாப்பிட முடியாமல் இருக்கிறேன். நீ அடிக்கடி சொல்கிறாயே, மாமரத்தடியில் கடலை மிட்டாய் தின்கிற வக்கீல்களைப் பற்றி; அவர்களைப் பார்த்து நான் பொறாமைப் படுகிறேன்'' என்றார் பிள்ளை. நீண்ட பெருமூச்சு விட்டார். பிறகு ''சாப்பிட்டு விட்டுக் காலையில் நடைபெற்ற விசாரணைக் குறிப்பில் இன்னொரு பிரதியை எடுத்து வை. கீழ்க் கோர்ட்டில் அவன் சொன்ன சாட்சியத்தையும் நன்றாகப் படித்து வை'' என்றார்.

சம்பத் தலையை ஆட்டினான். நளினி, சாப்பாட்டுப் பாத்திரத்தை எடுத்து வர உள் அறைக்குச் சென்றாள்.

''சாட்சியம் நமக்கு எதிராகப் பலமாக இருக்கிறதே'' என்றான் சம்பத், கவலையுடன்.

''பார்க்கலாம். குறுக்கு விசாரணையில் உடைகிறதா பார்ப்போம். வழக்கை நன்றாக ஜோடித்து விட்டார்கள். வக்கீல் கருணாகரனின் வேலை இது'' என்றார் பிள்ளை.

''வேலம்மாளுக்கும் குருசாமிக்கும் ஏற்கனவே தொடர்பு உண்டு என்று வாதாடுகிறார்களே, உண்மையாக இருக்குமா?'' — சம்பத் வியப்புடன் கேட்டான்.

''உண்மைதான். அன்றிரவு, இருவரும் ஒன்றாக இருந்ததை எவனோ பார்த்து விடவேதான் அவள் கூக்குரலிட்டுக் குருசாமியைக் காட்டிக் கொடுத்து விட்டாள்!''

''அப்படியும் ஒருத்தி செய்வாளா, சார்!''

''அப்படித்தான் செய்வாள். அவளோ கல்யாணம் ஆனவள். இவனோடு இரகசியத் தொடர்பு வைத்திருக்கிறாள். அதை ஒருவன் பார்த்து விட்டான். அந்தச் சூழ்நிலையில், தனது மானத்தைக் காப்பாற்றிக் கொள்ள இவனைக் காட்டிக் கொடுப்பதைத் தவிர வேறு வழி அவளுக்கு என்ன இருக்கிறது? 'காப்பாற்றுங்கள், காப்பாற்றுங்கள்' என்று கூக்குரலிட்டு விட்டாள்.''

''இது துரோகம் சார்!'' என்றான் சம்பத், கோபத்துடன்.

''அந்தச் சூழ்நிலையில் எந்தப் பெண்ணும் அப்படித்தான் நடந்து கொள்ள முடியும். வேறு எப்படி அவள் தப்பிக்க முடியும்?''



''அதற்காகச் செய்யாத குற்றத்துக்கு ஒருவனுக்குத் தண்டனை கொடுப்பதா?''

''இவன் என்ன குற்றம் செய்யவில்லை? இன்னொருத்தன் மனைவியோடு தொடர்பு கொண்ட குற்றத்துக்காகவாவது தண்டனை அடைய வேண்டியதுதானே. அந்தத் தண்டனையை இப்போது பலாத்காரக் குற்றத்துக்காக அடைகிறான் என்று வைத்துக் கொள்வோமே. உண்மையிலேயே இது பலாத்காரமாயிருந்திருந்து, யாரும் பார்த்திருக்கவில்லையென்றால், கதை வேறு மாதிரிப் போயிருந்திருக்கும்'' என்றார் பிள்ளை.

''எப்படி?''

''பலாத்காரம் நடைபெற்ற பிறகு எந்தப் பெண்ணும் வெளியே சொல்ல மாட்டாள். மானமுள்ளவளாயிருந்தால் தற்கொலை செய்து கொண்டு சாவாள். இல்லையென்றால், யாரிடமும் சொல்லாமல் மறைத்து விடுவாள். பலாத்காரத்துக்கு முயற்சி செய்யும் போது தான் ஒரு பெண், உதவி கோரிக் கூக்குரலிடுவாளே தவிர, பலாத்காரம் நடைபெற்று முடிந்து விட்டால், பிறகு, சத்தம் போட மாட்டாள். போட்டால், அவளுக்குத்தானே கேவலம். நடைபெற்று விட்ட விஷயம், ஊருக்குத் தெரியாமலே இருந்து விடட்டும் என்று சும்மா இருந்திருப்பாள்'' என்றார் பிள்ளை.

''ஒரு பெண்ணின் சம்மதத்தின் பேரில் தொடர்பு கொண்டு இப்படிக் காட்டிக் கொடுக்கப்படுவதை விட, அவள் சம்மதமின்றிப் பலாத்காரம் செய்வது ஆபத்தில்லை போல் இருக்கிறதே'' என்று கூறிச் சிரித்தான், சம்பத்.

''சாப்பாடு இன்னும் வந்து சேரவில்லை'' என்று கூறிக் கொண்டு வந்த நளினி, ''டிரைவர் எங்காவது போயிருப்பான். கொஞ்ச நேரம் காத்திருந்து பார்க்கலாம்'' என்று சொல்லி, நாற்காலியில் அமர்ந்தாள்.

''நாளை வக்கீல் சங்கக் கூட்டத்துக்கு வரப் போகிறீர்களா?'' என்று கேட்டார் ஆவுடையப்பபிள்ளை.

''வேடிக்கை பார்க்கவாவது வரவேண்டாமா?'' என்றான் சம்பத்.

''ஒரு நீதிபதி மீது கண்டனத் தீர்மானம் கொண்டு வருவது அசிங்கமான காரியம்'' என்றாள், நளினி.

''புரட்சிக் கட்சிக் கருணாகரனின் தூண்டுதல் தான் இது. அவருடைய வழக்குகளில் அவருக்கு எதிராக இந்த ஜட்ஜ், தீர்ப்புக் கூறுகிறாராம். இவர் வந்த பிறகு, கருணாகரனுடைய வழக்குகள் நிறையத் தோல்வியடைந்து விட்டன'' என்றார் பிள்ளை.

''அதற்காக நீதிபதி மீது கண்டனத் தீர்மானம் போட்டு விட முடியுமா? தீர்மா





ணத்துக்கு என்ன காரணம் காட்டுகிறார்கள்?'' நளினி கேட்டாள்.

''கருணாகரன் இரண்டு மூன்று வக்கீல்களைக் கைக்குள் போட்டிருக்கிறார். அவருடைய ஜூனியர் இருக்கிறானே தான் முக்கியமானவன்; ஒரே யடியாகக் குதிக்கிறான். ஜட்ஜை வாயில் வந்தபடி திட்டுகிறான்'' என்றான் சம்பத்.

''ஜட்ஜ், வக்கீல்களை மரியாதையாக நடத்தவில்லை என்பதைத்தான் முக்கிய குற்றமாகச் சொல்கிறான்.''

''சாதாரணமான ஜட்ஜாக இருந்தால், வக்கீலின் எந்த உளறலையும் கேட்டுக் கொண்டிருப்பார். ஆனால், இந்த ஜட்ஜ் ரொம்பப் புத்திசாலி. எதையும் விரைவில் புரிந்து கொண்டுவிடக் கூடியவர். சட்ட நுணுக்கங்களை நன்றாக அறிந்தவர். இவரை ஏமாற்ற முடியவில்லை. முட்டாள்தனமாகவும், பொருத்தமில்லாமலும் வக்கீல்கள் கோர்ட்டில் பேசுவதை அவரால் சகித்துக் கொள்ள முடியவில்லை. இதனால்தான் இந்தத் தகராறு'' என்றார் ஆவுடையப்ப பிள்ளை. ''என்ன இருந்தாலும் ஒரு நீதிபதியை அவமதிக்கிற மாதிரி கண்டனத் தீர்மானம் போடுவது நீதித் துறைக்கே நல்லதில்லை'' என்றார். கை வழுக்கைத் தலையைத் தடவியது. அவருடைய முகத்தில் வேதனையின் சாயல் படர்ந்தது.

''கருணாகரன் மூக்கை நன்றாக அறுத்தீர்கள்'' என்றான் சம்பத், உற்சாகத்துடன்.

''எப்போது ...? ஓ... கோர்ட்டில் சொன்னேனே, அதுவா, நான் அப்படிச் சொல்லியிருக்கக் கூடாது. ஏதோ ஓர் எரிச்சலில் நிதானம் இழந்து விட்டேன்'' என்றார் ஆவுடையப்பபிள்ளை, வருத்தத்துடன்.

''நீங்கள் சொன்னது சரிதான் சார். அப்போதுதான் அவர் அகம்பாவம் அடங்கும்!''

''நோ, நோ, அவருடைய சொந்த விஷயம் அது. மேலும் அவரைக் குறை கூறிப் பலர் முன் தூற்றுவதால் நமக்குத்தான் என்ன நன்மை? வீணாக அவர் மனம் புண்பட வைத்தது தான் மிச்சம். அனாவசியமாக என் மீது அவருக்கு வெறுப்பு ஏற்படும்படி நடந்து கொண்டேன்; அவ்வளவுதான்'' என்றார் ஆவுடையப்ப பிள்ளை, வருத்தத்துடன்.

பிள்ளையின் பெருந்தன்மையையும், விசால மனத்தையும் எண்ணி வியந்தான் சம்பத்.

''நீங்கள் சாப்பிட்டு விட்டு நேராக கோர்ட்டுக்கு வாருங்கள். நான் வக்கீல் சங்கத்துக்குப் போய்விட்டு வருகிறேன். நாளைக் கூட்டத்துக்கு என்ன ஏற்பாடு செய்ய வேண்டும் என்பதைப் பார்த்து விட்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு ஆவுடையப்ப பிள்ளை வெளியே வந்து காரில் ஏறினார்.

ஆவுடையப்ப பிள்ளைக்கு வயது அறுபத்தைந்து இருக்கும். கிரிமினல் வழக்குகளில் புகழ் பெற்ற வழக்கறிஞர்.

''வக்கீல் பிள்ளை இருக்கிறார்; வெட்டு தலையை'' என்று கூறிக் கொண்டு சந்தனத் தேவன், ஒரு கொலையைச் செய்தானாம்! இப்படி ஒரு கதை பரவும் அளவுக்கு அவர் பிரபலம் அடைந்திருந்தார்.

ஆவுடையப்ப பிள்ளையைப் பற்றி இப்படிப் பல கதைகள் உண்டு. அவற்றில் சில உண்மையானவை. பல கதைகள் புராணங்களைப் போன்றவை. வெள்ளைக்கார ஜட்ஜுகள் கூட அவரைக் கண்டு அந்தக் காலத்தில் பயந்தார்கள் என்று சுற்றுப்புறக் கிராமங்களில் பலர் நம்பினார்கள். உண்மையில் ஆவுடையப்ப பிள்ளையின் பெருந்தன்மையிலும், இனிமையான குணத்திலும், சட்ட நுணுக்கங்களிலும், வாக்குச் சாதுர்யத்திலும் எல்லா நீதிபதிகளுமே மிகுந்த மரியாதை கொண்டிருந்தார்கள். வழக்குகளில் வெற்றி தோல்வியைப் பற்றிக் கலங்காமல், நிதானமாகவும், அழுத்தமாகவும் தம்முடைய கட்சியை எடுத்து வாதிக்கும் திறமையில் எல்லாரையும் மயக்கி விடுவார். வழக்கு விவரங்களையோ, சாட்சிகளையோ, சட்ட நுணுக்கங்களையோ குழப்பி, நீதிபதிகளைக் குழம்ப வைத்து, வழக்குகளில் வெற்றி பெறும் சிறுமை அவரிடம் இல்லை என்பதைப் புரிந்து கொண்ட நீதிபதிகள், அவர் மீது மிகுந்த நம்பிக்கையும் மரியாதையும் கொண்டிருந்தனர். ஆவுடையப்ப பிள்ளையின் வெற்றி இரகசியம் முழுவதும் குறுக்கு விசாரணை செய்யும் விதத்திலும், அதன் பிறகு கிடைத்த தகவல்களைக் கோவைப் படுத்தி வாதம் செய்யும் திறமையிலும் தான் இருந்தது.

ஆவுடையப்ப பிள்ளை இப்போது குடியிருக்கும் பெரிய பங்களா, ஒரு ஜமீன்தாருடையது. முப்பது ஆண்டுகளுக்கு முன் ஜமீன்தார் சார்பில் ஒரு கொலை வழக்கில் ஆஜரானார். ஜமீன்தாருக்கு விடுதலை வாங்கிக் கொடுத்ததற்காக அந்தப் பங்களாவை இனாமாகக் கொடுத்தார், ஜமீன்தார்.

ஆவுடையப்ப பிள்ளை, வக்கீல் தொழிலுக்கு வந்து கிட்டத்தட்ட நாற்பது ஆண்டுகள் ஆகி விட்டன. ஒரு தலைமுறைக்குள் நீதித் துறையில் எவ்வளவு மாறுதல்கள்!

ஆவுடையப்ப பிள்ளைக்கு நீதித் துறையின் இன்றைய சூழ்நிலை மிகுந்த மன வேதனையைக் கொடுத்தது. நீதிபதிகளின் வேலை நியமனத்திலும் கூட அரசியல் செல்வாக்கு தலையிடும் அவல நிலையை எண்ணி மறுகினார்.

ஒரு காலத்தில் சென்னை நீதித்துறை, இந்தியாவின் பெருமைக்கும், மரியாதைக்கும் உரியதாயிருந்தது. இன்று அந்தப் பெருமையெல்லாம் மறைந்து கொண்டு வருவதை எண்ணிப் புழுங்கினர்.

அந்தக் காலத்து நீதிபதிகளுடைய புத்திக் கூர்மையையும், ஆழ்ந்த சிந்தனையையும் நீதியின் மீது அவர்கள் கொண்டிருந்த பக்தியையும், மரியாதையையும் நினைத்துப் பார்த்தார், அந்தக் காலத்துத் தீர்ப்புக்கள், இலக்கியங்களாகவே அமைந்திருந்த பாங்கையும், நீதிபதிகளின் கண்ணியத்தையும், நீதி மன்றங்களில் அவர்கள் பெருந்தன்மையாக நடந்து கொண்ட முறையையும் எண்ணிப் பார்த்த பின்னே, இன்றைய மாறுதல்களை நினைத்து மலேத்தார். சோஷலிசம், ஜனநாயகம் என்னும் போர்வையில் நடைபெறும் சுயநல அரசியல், நீதித்துறையைப் பாதிக்கும் விதமும் நீதித்துறையிடம் மரியாதை குறைந்து விட்ட அவலமும் ஆவுடையப்ப பிள்ளையின் மனத்தைத் துன்புறுத்தின. அரசியல் வாதிகள் நீதித் துறையையும், நீதிபதிகளையும் விமர்சனம் செய்வதை நாகரிகமாக எண்ணும் அளவுக்கு இந்நாட்டில் நீதித்துறையின் கௌரவம் தாழ்ந்து விட்டதே என்பதை நினைக்கும்போது, வக்கீல் தொழிலேயே உதறி விடுவோமா என்ற எண்ணம் கூட அவருள் எழுவதுண்டு. நீதிபதிகளின் நியமனத்தில் திறமையும், நேர்மையும் பரிசீலிக்கப்படாமல், அரசியல் செல்வாக்கும், சிபாரிசும் மட்டுமே கவனிக்கப்படும் போது: நீதித் துறையின் தரம் எப்படி உயர முடியும்? என்று நினைத்து வருந்துவார்.

தமது புகழுக்கு முதன் முதலில் காரணமாயிருந்த பரபரப்பான ஒரு வழக்கின அப்பீல், உயர்நீதி மன்றத்தில் நடைபெற்ற போது, தமக்கு ஏற்பட்ட அனுபவங்களை அடிக்கடி எண்ணிப் பார்ப்பார்.

அது ஒரு விசித்திரமான வழக்கு. —

ஒரு குடிகாரக் கணவனை அவனுடைய இரண்டு இளம் மனைவிகளும் சேர்ந்து கொலை செய்து விட்டார்கள். சாட்சியங்கள் மிகப் பலமாயிருந்தன.

மாவட்ட நீதிமன்றத்தில் பிள்ளைக்குத் தோல்விதான் கிட்டியது. குற்றவாளிகள் இருவரும் ஆயுள் தண்டனை பெற்றனர். அந்த வழக்கின் அப்பீல், உயர்நீதிமன்றத்தில் நடைபெற்ற போது, மூன்று நீதிபதிகள், பிள்ளையின் வாதத்தைக் கேட்டார்கள். மூன்று பேரில் இருவர் வெள்ளைக்காரர்கள்.

''தண்டனை வழங்குவது பற்றி உலகத்தின் சிந்தனைப் போக்கிலே இன்று மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. மைலார்ட்! மரண தண்டனை கூடாது என்றுதான் அறிவாளிகள் கருதுகிறார்கள். தண்டனை, என்பது குற்றவாளியைப் பழிவாங்குவதற்காக அமையக் கூடாது என்று எண்ணுகிறார்கள்.''

இந்தச் சமயத்தில் ஒரு நீதிபதி குறுக்கிட்டார். ''தண்டனையின் தத்துவமே பழி வாங்குவதுதான். துன்பம் அனுபவித்தவனுடைய மனத் திருப்திக்காகவும், சமூகத்தில் மற்றவர்களுக்குப் பயம் இருக்க வேண்டும் என்பதற்காகவும் தான் தண்டனை.''

''மை, லார்ட், இரத்தத்துக்கு இரத்தம், பல்லுக்குப் பல், உயிருக்கு உயிர் என்பது, வளர்ச்சி பெறாத சமுதாயத்தின் பழங்காலச் சிந்தனைகள்'' என்றார் பிள்ளை.

குற்றவாளிகளின் மீது குற்றம் நிரூபணமாகி விட்டது; இனி வேறு வழியில்லை என்று தண்டனையைப் பற்றி ஆவுடையப்ப பிள்ளை பேசுகிறார் என்பதைப் புரிந்து கொண்ட ஒரு நீதிபதி சொன்னார்: ''சமூகத்தில், மனிதர்களுக்கு இடையே வெறி கொண்ட மிருகங்களை அலைய விடுவது தவறு. அநீதமான காரணம் இல்லாமல் செய்யும் கொலைகளுக்குத் தண்டனை கொடுத்தே தீர வேண்டும்.''

''இதைவிட அநீதமான காரணம் வேறு என்ன வேண்டும்; மை, லார்ட்? குற்றவாளிகளுக்கு இருபத்தைந்து வயது கூட இல்லை. வாழ்க்கையை இன்பமாக அனுபவிக்க வேண்டும், எப்படியெல்லாமோ வாழ வேண்டும் என்று கற்பனை செய்யும் பருவம். இந்த வயதில் இவர்களை இவர்களுடைய கணவன் வாழ விட்டானா? குடித்து விட்டு வந்து தினமும் கொடுமைப் படுத்தினான். அணைக்க வேண்டிய கைகள், அடித்தன. கொஞ்ச



## சமர்ப்பணம்

டாக்டர்கள் சமூகத்தில் மிகவும் கண்ணியமான, கௌரவமான இடத்தைப் பெற்றிருப்பவர்கள்; நோயைத் தீர்த்து மக்களை மறலியின் கையிலிருந்து மீட்டு உயிர் காக்கும் உன்னத பணியில் ஈடுபட்டிருப்பவர்கள். அவர்களது புனிதமான பணிக்கு மாசு கற்பிக்கும் வகையில் திரைக் கதையைப் புனைவது கொடுமை! கதை என்னவென்று எழுதவே கூச்சமாக இருக்கிறது விடுங்கள்!

மனிதப் பண்பையும் சமுதாய அற நெறி முறைகளையும், டாக்டர்களின் புனிதப் பணியையும் வேரோடு கெல்லி வெந்நீரையும் ஊற்றும் இந்த விபரீதப் போக்கான கதையை ஏன் படமாக்கினார்கள்? (இதற்கு ஒரு நோக்கம் வேறு கேடா?)

ஆபாசத்துக்கும் குறைவில்லை. சமர்ப்பணம் என்ற புனிதமான சொல்லைக் களங்கப்படுத்தி விட்டார்கள்.

-காந்தன்

SEVENTEEN % INTEREST

# மகிழ்வுடன் ஞாபகமூட்டுகின்றோம்

## இந்தியன் பாங்க்

23-7-74 அன்றும் அதற்கு பின்பும்
செய்யப்படும் டெபாசிட்டுகளுக்கு மட்டுமின்றி
23-7-1974க்கு முன்பு செய்யப்பட்ட
டெபாசிட்டுகளுக்கும்
எஞ்சியுள்ள காலத்திற்கு கீழ்க்கண்டபடி
அதிக வட்டி விகிதங்கள் அளிக்கப்படும்
என்பதை நமது ஆதரவாளர்களுக்கு
ஞாபகமூட்டுகிறது.

| | |
|---|---|
| ஐந்து ஆண்டுகளுக்கு மேல் | 10% |
| மூன்று ஆண்டுகள் மற்றும் அதற்குமேல் | 9% |
| ஒரு ஆண்டு மற்றும் அதற்குமேல் | 8% |
| ஒன்பது மாதங்கள் மற்றும் அதற்குமேல் | 7% |
| ஆறு மாதங்கள் மற்றும் அதற்குமேல் | 6% |
| 91 நாட்கள் மற்றும் அதற்குமேல் | 5.5% |

மேலும் எமது ஆதரவாளர்கள் ஆண்டுக்கு
நூற்றுக்கு 17 சதவிகிதம் வரை
வட்டி பெறும் வகையில் எம்மிடம் டெபாசிட்
திட்டங்கள் உள்ளன.

**விவரங்களுக்கு அருகில் உள்ள
எமது கிளையில் விசாரிக்கவும்.**

## இந்தியன் பாங்க்

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)
தலைமை அலுவலகம்: 17 வடக்கு கடற்கரை சாலை,
சென்னை-600 001.




**உங்கள் நலனில் அக்கறையுள்ள பாங்க்**

செலவை குறையுங்கள் – அதிகம் சேமியுங்கள்
உங்கள் சேமிப்பு வளர வகை செய்யுங்கள்

# பாருங்கள் எப்படி ப்யூரிடாஸ் ஃபில்ட்டர்கள் சாதாரணக் குழாய் நீரை வடிகட்டி அசுத்தங்களை நீக்கி நூற்றுக்கு நூறு தீங்கற்ற நல்ல குடி நீராக ஆக்கிவிடுகிறது

நீர்வழிப் பரவும் நோய்களான காலரா, டைஃபாயிடு, சீத பேதி, இரைப்பை-குடல் அழற்சி முதலியவற்றைத் தடுத்துக் காக்க இதைவிட மேலான உத்தரவாதம் எதுவுமில்லை.




ப்யூரிடாஸ் இலேசானது, உடையவே உடையாது, தூக்கிச் செல்ல வாகானது, துப்புரவாக்க இலகுவானது.

உங்கள் ஆதரவுக்குரியவர்களுக்கு ஆதரவளியுங்கள்:
இன்றே பெறுவீர் ஒரு ப்யூரிடாஸ்





இலவசக் கைப் புத்தகத்திற்கு எழுதுக:

பல்சாரா

BALSARA

CHAITRA-BLS-19 TAM

வேண்டிய வாய், தகாத ஏச்சுக்களைப் பொழிந்தன. ஒருநாளா? இரண்டு நாட்களா? இரண்டு ஆண்டுகளாக இந்த நரக வேதனை. எல்லாவற்றுக்கும் மேலாகத் தன்னுடைய மனைவிகளை விபசாரத்துக்குக் கூடக் கட்டாயப்படுத்தும் அளவுக்கு அவனுடைய கொடுமை அதிகரித்து விட்டது. அவனுக்குக் குடிக்கப் பணம் போதவில்லை. எனவே, மனைவிகளை விற்கக் கூடத் துணிந்து விட்டான். இந்தச் சூழ்நிலையிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ள ஒரு மானமுள்ள பெண்ணுக்கு இந்தச் சமுதாயத்தில் இரண்டு வழிகள் தாம் உண்டு. ஒன்று, தற்கொலை செய்து கொள்வது. மற்றொன்று, இப்போது இந்தப் பெண்கள் செய்ததைப் போல் தீரமான ஒரு காரியத்தைச் செய்வது. இவர்கள் கொன்றது மனிதனை அல்ல, மைலார்ட்! ஒரு மிருகத்தை, வெறிகொண்ட ஓர் ஆபாசமான மிருகத்தைத் தான்! தற்காப்புக்காக நடைபெற்ற கொலை. ஒரு கொடியவனிடமிருந்து தப்பிக்கத் துடித்த இந்த இளம் பெண்களின் செயலை நான் மனிதாபிமானத்தோடு நோக்குகிறேன். இந்தச் சமுதாயமும் இவர்களை மன்னிக்கத் தான் விரும்பும்'' என்று பேசிவிட்டு அமர்ந்தார் ஆவுடையப்ப பிள்ளை.

நீதிமன்றத்தில் சற்று நேரம் ஆழ்ந்த அமைதி நிலவியது. ஆவுடையப்ப பிள்ளையின் வாதத்தில் நிறைந்திருந்த யதார்த்த பூர்வமான விஷயங்கள், நீதிபதிகளின் சிந்தனையைக் கிளறி விட்டன. ஒரு வாரத்தில் தீர்ப்புக் கூறுவதாக எழுந்து விட்டார்கள்.

ஒரு வாரத்துக்குப் பிறகு, குற்றவாளிகளின் வயதையும், கொலை தற்காப்புக்காக நடைபெற்றது என்ற சூழ்நிலையையும் கருத்தில் கொண்டு இருவரையும் விடுதலை செய்து தீர்ப்பளிக்கப்பட்டது. அதுதான் ஆவுடையப்ப பிள்ளையின் புகழுக்குக் காரணமாயிருந்த முதல் வழக்கு. அந்த வழக்கின் சூழ்நிலையையும், தத்துவத்தையும் இன்றைய நீதிபதிகள் பலர் புரிந்து கொள்ளவே முடியாது என்பது தான் பிள்ளையின் கருத்து.

''அந்த மாதிரி ஒரு வழக்கில், குற்றவாளிகளை விடுதலை செய்யும் துணிவு இன்று யாருக்கும் இருக்காது'' என்று அடிக்கடி கூறுவார். நீதிபதிகளின் தரம் மட்டும் அல்ல, வழக்கறிஞர்களின் தரம் கூடக் குறைந்து போய் விட்டதாகச் சொல்வார் பிள்ளை. நீதியின் தத்துவங்களைப் புரிந்து கொள்ளாமல், வழக்கின் தரத்தைக் கணித்துக் கொள்ளாமல், சட்ட விவரங்களைக் கூடப் படித்துத் தெரிந்து கொள்ளாமல் நீதிமன்றத்தில் மேம்போக்காக எதையாவது பேசத் துணியும் வழக்கறிஞர்களைக் கண்டு வேதனையடைந்தார். இவ்விதம் பிறர் மீது அபிப்பிராயம் கொள்ளவும் கூறவும் தகுதி உள்ளவர் அவர்.

ஓர் உண்மையான வக்கீலுக்கு, வழக்கின் வெற்றி தோல்வி பெரிய விஷயமல்ல. அந்த வழக்கை நடத்துவதற்காகத் தாம் எடுத்துக் கொண்ட சிரமமும், படித்த படிப்பும், நீதிபதியின் முன்னிலையில் வழக்கை நடத்திய பாங்கும், எல்லாவற்றுக்கும் மேலாக, அந்த வக்கீலின் திறமையைப் புரிந்து கொள்ளக் கூடிய நீதிபதியின் புத்திசாலித்தனமும் தாம் மிகுந்த திருப்தியைக் கொடுக்கும். மந்தபுத்தியுள்ள நீதிபதியின் முன்னால் வழக்காடுவதைப் போன்ற துயர சம்பவம், ஆற்றல் உள்ள வக்கீலுக்கு வேறு இல்லை.

இப்போது, இதைப் பற்றியெல்லாம் யாரும் கவலைப்படுவதில்லை. யாரெல்லாமோ எப்படியெல்லாமோ நீதிபதிகளாக வருகிறார்கள். இதே தரத்தில், வக்கீல்களும் சகல மாதிரி தோன்றி விட்டார்கள். நீதி மன்றத்தில் எப்படியெல்லாமோ வழக்குகள் நடைபெறுகின்றன; தீர்ப்பளிக்கப் படுகின்றன. நீதி, திசை தெரியாமல் திகைக்கிறது.

இப்படி ஒரு தரம் கெட்ட சூழ்நிலையில், ஒரு நீதிபதி மீது வக்கீல்கள், கண்டனத் தீர்மானம் போடுவதில் அதிசயம் ஒன்றுமில்லை என்று எண்ணியபடியே, வக்கீல் சங்கக் கட்டிடத்தின் படிகளில் ஏறினார், ஆவுடையப்ப பிள்ளை. (தொடரும்)

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

## ஹவஸ்

இதன் பொருள் பேராசை. சிற்றின்ப இச்சை என்றும் ஓர் அர்த்தம் ஹவஸ் என்ற பதத்துக்கு உண்டு. காசுக்கும் பேராசைப்படும் திரைப்படத் தயாரிப்பாளர் சிற்றின்பத்துக்கே முக்கியத்துவம் தந்துள்ளார் இப்படத்தில். குளுகுளு கலர் என்ற வகையில் ஹவஸ் கண்ணுக்குக் குளிர்ச்சியான படம். பிரபல நட்சத்திரங்களைக் காரண காரியமில்லாமல் போட்டுக் கவர்ச்சியைக் காட்டிக் காசு பண்ணப் பார்த்திருக்கிறார்கள். அந்த வகையில் ரேகா, நீதூசிங், பிந்து ஆகியோர் உள்ளனர். கதாநாயகன் அனில் தாவன் - நல்ல கொழு கொழு மொழு மொழு! நடிப்பு? அதை யார் கேட்கிறார்கள்? -கௌசிகன்






# புது நாட்டுப் பெண்!

இந்திரா காந்தியின் மருமகளாக வரவிருக்கும் குமாரி மேனகா ஆனந்த் அழகிப் பட்டம் பெற்றவர். டில்லியில் உள்ள லேடி ஸ்ரீராம் பெண்கள் கல்லூரியில் படித்த போது ''1973-ம் ஆண்டு கல்லூரி அழகி''யாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஆகவே மேனகை என்ற பெயர் பொருத்தமானதுதான். 'இந்திரா'வின் மாளிகைக்கு 'மேனகை' வருகிருர் என்பதும் மற்றொரு பொருத்தம்! ஆனந்த பவனத்தில் பிறந்தவர் இந்திரா! ஆனந்தின் மகளாகப் பிறந்தவர் மேனகை! — இத்தனை பொருத்தம் பார்த்துத் தான் திருமணம் நிச்சயித்தார்களோ என்னவோ! (இன்னெரு சுவையான குட்டித் தகவல் — இந்த 'மேனகை' தற்சமயம் வசிப்பது டில்லியில் உள்ள காலனிகளில் ஒன்ருன கிரேட்டர் ''கைலாஷ்''ல்!)

அரசியல் ஹானர்ஸ் வகுப்பு மாணவியாக இருந்தபோதே ஒரு சில விளம்பரக் கம்பெனிகளுக்கு மாடலாகப் பணியாற்றி யிருக்கிருர். டவல், நுரை மெத்தை போன்ற சில பொருள்கள் விளம்பரங்களில் இவர் படம் இடம் பெற்றுள்ளது. மாடல் உலகில் இவருக்கு நல்ல பெயராம்; கிராக்கியாம். ஒரு கலர்ப் படத்துக்குக் கிட்டத்தட்ட 350 ரூபாய் வாங்கி உள்ளாராம்!

தாம் 'போஸ்' கொடுத்த விளம்பரங்களை உபயோகிக்க வேண்டாம் என்று விளம்பரக் கம்பெனிகளுக்கு இப்போது தெரிவித்து விட்டார்!

கவிதை, நாடகம் ஆகியவைகளில் மிகுந்த ஈடுபாடு உண்டு இவருக்கு. ஆங்கில நாடகங்களில் நடித்திருக்கிருர். எழுத்துத் துறையில் ஏற்பட்ட ஆர்வம் காரணமாக 'ஜர்னலிஸம்' படிக்க ஆரம்பித்தார். பாதியில் படிப்பை நிறுத்தி விட்டார். (இவர் ஹானர்ஸ் படிப்பையும் இடையில் நிறுத்தி விட்டாராம்!)

மேனகாவிற்கு சஞ்சய் காந்தியைக் கடந்த ஒரு வருஷமாகத் தெரியும், பழக்கம்!

பழக்கம் எப்படி ஆரம்பித்தது? லேடி ஸ்ரீராமில், மாயா ஒப்லேகர் என்ற மாணவி, மேனகாவின் தோழி! மாயா, திருமதி இந்திரா காந்திக்கு ஒரு விதத்தில் உறவினர். மாயாவைச் சந்திக்க வந்த சஞ்சய், மேனகாவையும் சந்தித்தார். அதன் பிறகு அடிக்கடி கல்லூரிக்கு வருவாராம். கல்லூரித் தோழிகள் மாயாவைக் கிண்டல் செய்வார்களாம். ஆனல் மாயாவைப் பார்க்க வருவது மேனகாவைச் சந்திப்பதற்கு ஒரு சாக்குதான் என்று அவர்களுக்குத் தெரியாது. ஏன், மாயாவுக்குக் கூட முதலில் தெரியாது. இந்தத் தகவல் எவ்வளவு தூரம் உண்மை என்று தெரியவில்லை!

மேனகா — சஞ்சய் திருமணம் எப்போது? 'கம்' செப்டம்பர் என்று மேனகா மனத்துக்குள் 'ஹம்' செய்வது உங்களுக்குக் கேட்கவில்லை?

— சமது டில்லி நிருபர்

## மனமாசுகள் துடைக்கும் மாசிலாமணி!

இத்தலத்தில் லிங்கத் திருமேனியை நேருக்கு நேராகச் சித்திரைச் சதயத்தன்று மட்டுமே நாம் தரிசிக்க முடியும். மற்ற தினங்களில் லிங்கமானது சந்தனக் காப்புக்குள்ளேயே புதைந்திருக்கும். தினந்தோறும் ஆவுடையாருக்கு மட்டுமே அபிஷேகம்.

''வெட்டுப்பட்டிருந்தாலும் நான் மாசற்ற மணியாக்கும்'' என்று ஈசனே தொண்டைமான் சக்கரவர்த்திக்கு அருள்வாக்குக் கூறிய தலம் இது. தான் ஏறிவந்த யானையின் காலை இடறிய முல்லைக் கொடியைத் தொண்டைமான் வெட்ட, அக்கொடிக்குள்ளிருந்து ரத்தத்தைக் கொப்பளித்து எழுந்த இலிங்கப் பிரான் இவர். தன்னை வெட்டியவனுக்கு உதவி புரிவதற்காகவே அவனது எதிரிகளான குறும்பனையும் கண்டனையும் நோக்கி நந்திகேசுவரரைப் போர்க் கோலத்தில் அனுப்பி வைத்த அருள் நிதி இவர். இதனால்தான் இங்கு நந்தி, ஸ்வாமிக்கு எதிர்த் திசை பார்த்திருக்கிருர். இறையருளால் வெற்றி கொண்ட தொண்டைமான் எதிரிப்படையிருந்து கவர்ந்த இரு அற்புத வெள்ளெருக்குத் தூண்களை இப்பெருமானுக்குச் சமர்ப்பித்தான். அவனுக்கு அருள்புரியும் ஆவேசத்தில் தன் இயல்பான அடக்கம் மறந்து, வேகமாக வந்து ஸ்வாமிக்கு வலப்புறம் நின்ருளாம் அம்பாள், கொடியிடை நாயகி.



சென்னையின் மேற்கே பத்தே மைலில் அம்பத்தூருக்கருகே உள்ளது வடதிருமுல்லைவாயில். இங்கு தெய்விகப் பேரவையின் பேராதரவில் சிறப்புற ஸ்ரீஜீர்ணோத்தாரணம் செய்யப்பெற்றுவரும் ஆலயத்துக்கு ஆகஸ்டு 29ந் தேதி குடமுழுக்குப் பெருவிழா நடக்கிறது.

மாசிலாமணியின் ஆசியினைப் பெற அன்பர்கள் காணிக்கை அள்ளி வழங்க வேண்டுகிறோம். பொருள் அனுப்ப வேண்டிய முகவரி: ம. செல்வராஜ், பொருளாளர், அருள்மிகு மாசிலாமணிசுவரர் திருக்கோயில், வட திருமுல்லை வாயில் (அஞ்சல்), சென்னை - 600062.

"என் ராசா! என் மவனே! இப்படி என்னே ஏமாத்திட்டுப் போயிட்டியேடா! நான் என்னடா செய்வேன்? எந்தப் பாவி உன் கழுத்தை நெரிச்சு இப்படிக் கடலிலே தள்ளிட்டுப் போனானடா? அவன் நல்லா இருப்பானா? கழிச்சல்லே போக அவன்! காளி யாயி கேட்க அவனே!''

கிழவி குப்பாயி அந்தச் செய்தி காதில் விழுந்ததுமே துடிதுடித்துக் கதறிவிட்டாள்.

'கடற் கரையிலே ஒரு பிணமாம். அலைகள் ஒதுக்கியிருந்தனவாம். இயற்கையாக ஏற்பட்ட மரணம் என்று தோன்றவில்லையாம். யாரோ கழுத்தை நெரித்துக் கடலில் தூக்கிப் போட்டிருக்க வேண்டுமாம். சவத்தைச் சோதனைக்கு ஆசுபத்திரிக்கு எடுத்துப் போயிருக்கிறார்களாம்.'

பொழுது விடிந்ததும் விடியாததுமாக அவள் செவிகளில் விழுந்த சாவோலை இதுதான்.

மூன்று நாட்களாகக் கிழவியின் மகன் வீட்டுக்கு வரவில்லை. அவன் லாரியில் கிளீனர் வேலை செய்து வந்தான். பெயர் வேலய்யன்.

நடந்தது கோரக் கொலை என்பதாலோ என்னவோ, கடல் சவத்தைத் தன்னுள் அடக்க அஞ்சிக் கரையில் ஒதுக்கிவிட்டிருந்தது.

இந்தச் செய்தி காதில் விழுந்ததும் 'குடு குடு' குப்பாயி 'கிடுகிடு' வென்று நிகழ்ச்சிக்குப் பல முடிச்சுகள் போட்டுக் கொண்டு ஆஸ்பத்திரியை நோக்கி விரைந்தாள்.

சவக் கிடங்கில் இனம் கண்டு போக வந்திருந்த கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு எட்டிப் பார்த்தாள். ஒரு கணம் அப்படியே விக்கித்து நின்றாள். அடுத்த கணம் ஒப்பாரி வைத்துப் பிலாக்கணம் பாடத் தொடங்கி விட்டாள்.

அவள் வாயை ஓய வைத்து விஷயத்தைக் கிரகிப்பதற்குள் போலீசாருக்குப் போதும் போதுமென்றாகி விட்டது.

''என் மகனே இப்படிக் கொன்னு போட்டானே, பாவி! அவன் நாசமாகப் போக, நல்லா யிருப்பானா?'' என்று இடித்துரைத்து வசவு பாடிய குப்பாயியைப் போலீசார் கேட்டனர்:

''இது உன் மகன்தான் என்று எப்படி நீ உறுதியாகக் கூற முடியும்? அடையாளம் என்ன?''

அழுகையிலும் ஒரு துயரச் சிரிப்பை உதிர்த்த குப்பாயி, ''என் சாமி! தாய் அறியாத சேய் உண்டா? ஆயிரம் கல்லுகள்






# செய்தியில் விளைந்த சிறு கதை....

ரா. வீழிநாதன்

மந்தையாக நின்றாலும் தாய்ப் பசு தன் கன்றை இனம் கண்டு கொள்ளாதா. இந்தக் கண்ணு, இந்த மூக்கு? இந்த வாய் எல்லாம் அவரையே உரிச்சு வைச்சிருக்கு! பாலூட்டிச் சீராட்டி வளர்த்து ஆளாக்கிய பிள்ளையைப் பெற்றவளுக்குத் தெரியாமல் போய்விடுமா? இவனுக்குக் கண்ணாலம் கட்டி வைக்கப் பொண்ணுகூடத் தேடிக்கிட்டிருந்தேன், சாமி! நான் கட்டின கோட்டையை யெல்லாம் கனவாக்கி விட்டுப் போயிட்டானே, பாவி!'' என்று தன் மகனுக்கும் ஒரு பாவிப் பட்டம் சூட்டி விட்டு, விட்ட இடத்திலிருந்து அழுகையைத் தொடர்ந்தாள்.

அவளது அந்தத் தர்க்கத்துக்கு அப்பீல் ஏது? போலீசார் சவத்தை அடக்கம் செய்ய அவளிடமே கொடுத்தனர். அதனை அடக்கம் செய்யப் பணத்துக்காக அவள் புலம்பத் தொடங்கவே, அங்கேயே கணிசமான ஒரு தொகையும் சேர்ந்தது. 'தமக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று' என்ற மகிழ்ச்சியில் எத்தனையோ பேர் தாராளமாகவே வழங்கினர். அதனால் சடலத்தைச் சுருக்கமாக அடக்கம் செய்த இறவி குப்பாயிக்குக் கையில் நாலு காசும் மிச்சப்பட்டது.

2

''செல்லம்! எத்தனை நாளைக்குத்தான் இப்படி நீக்குப் போக்குக் காட்டுவே, சாக்குப் போக்குச் சொல்லுவே? என்னைக் கண்ணாலம் கட்டிக்கிறதா உத்தேசமா? இல்லே, இப்படியே டபாய்க்கிறதா எண்ணமா?''

திருவொற்றியூர் பட்டினத்துப்பிள்ளைச் சமாதியை ஒட்டிச் சென்ற ஒற்றையடிப் பாதையில் வழிமறித்து நின்று வேலய்யன் கேட்டான்.

''இதோ பாரு! குடிகாரக் கோவிந்தன் உறவு முறை கொண்டாடிக்கிட்டு வந்து என்னைத்தான் கண்ணாலம் கட்டிக்குவேன்னு ஒற்றைக் கால்லே நிக்கறான். நல்லாப் போட்டுட்டு வந்துட்டான்னா அவனாலே இரண்டு கால்களாலுமே நிக்க முடியறதில்லே. தெருவிலும் வரப்பிலும் மதிமயங்கிக் கிடக்கும் அவனை 'ஒப்பாரானை' நான் கட்டிக்குவேனா? ஆனா இந்த ஒத்தையடிப் பாதையிலே கிடக்கும் முள்ளைத் தூக்கி எறிஞ்சால் அல்லவோ நான் உன்னைக் கைப்பிடிக்க முடியும்?''

செல்லம் சாமர்த்தியமாகப் பொடி வைத்துப் பேசினான்.

வேலய்யனின் கற்பனை வேலை செய்தது. 'செல்லத்துக்குக் கோவிந்தனைப் பிடிக்கவில்லை என்பது உறுதி. தன் காதலை ஒற்றையடிப் பாதையோடு ஒப்பிடுகிறான் என்பதால் அவன் வேலய்யனைத் தவிர வேறு யாரையும் காதலிக்கவில்லை என்பதும் தீர்மானம். முள்ளைத் தூக்கி எறிய வேண்டும் என்கிறானே, அதற்கு என்ன பொருள்? முள்ளாக நிற்கும் கோவிந்தனை என்ன செய்ய வேண்டும்? கொல்ல வேண்டுமோ? ஐயையோ! அது என்னால் முடியாது. அதோடு செல்லத்தையும் என்னால் மறக்க முடியாதே!'

தர்மசங்கடப்பட்டுக் கொண்டே, ''அம்மா! பரதேவதை! காதலுக்காகக் கொலை செய்யச் சொல்லாதே! அந்த முள்ளை நீக்குவது உன் பாடு!'' என்றான் வேலய்யன்.

''ஐய! அறிவு போகிற போக்கைப் பாரு! இந்தக் காதல் பித்தம் தலைக்கேறினால் இப்படித்தான் ஏதாவது ஒன்னுக்கொண்ணு பேசத் தோன்றும் போலிருக்கு! இப்போத்தான் அவரைப் பார்த்தேன். எந்தப் பயல் என் காதலுக்குக் குறுக்கே நிற்கிறான் சொல்லு! அவன் கழுத்தை நெரித்துக் கடலிலே எறிந்துவிட்டு மறு காரியம் பார்க்கிறேன் ஒரு! நீ என்னடான்னா...'' என்று கூறிக் கொண்டே கடற் கரைப் பக்கம் நடையைக் கட்டினான் செல்லம். வேலய்யனும் வளர்த்த நாயாக அவனைத் தொடர்ந்தான்.

''இதோ பாரு! என்னிடம் இரண்டாயிரம் ரூபாய் இருக்குது. நீயும் உன்னிடம் இருக்கிறதை எடுத்துக்க. இரண்டு பேரும் சொல்லாமல் கொள்ளாமல் 'கண்காணாத இடத்துக்குப் போய்க் கல்யாணம் கட்டிக் கொண்டு வாழ்வோம். இருக்கிற பணத்தைப் போட்டு ஏதாவது தொழில் நடத்திப் பிழைக்கலாம்!'' என்றான் செல்லம்.

வேலய்யனின் விழிகள் அங்கிருந்த வண்ணமே லாரி முதலாளியின் பணப் பெட்டியைத் தேட்டை போட்டன. அதில் செல்லம் சொல்லும் ரூபாய்களுக்குக் குறையாமலே இருந்தன. 'ஒருத்தனொருத்தன் காதலுக்காக என்னென்னவெல்லாமோ செய்கிறான். நாம் அந்தப் பணத்தை எடுத்துக் கொண்டால் என்ன?' இப்படி எண்ணம் ஓடவே, ''அப்படியானால் நாளைக்கே புறப்படுவோமா நாம்?'' என்று கேட்டான் வேலய்யன்.

பூசை வேளையில் கரடியாகத் தோன்றினான் கோவிந்தன் கடற் கரையில். கண் மண் தெரியாமல் குடித்துவிட்டு யாரிடமோ அடிபட்டுக் கழுத்து கன்னங்களில் நகக் கீறல்களும் ரத்தக் காயங்களுமாகக் காட்சி அளித்தான். அடிபட்ட புலியெனச் சீறி வேலய்யன் மீது பாய்ந்தான்.

''ஏலே! அவ என் பொண்சாதிடா! தெரியுமில்லே! — கைய் — இய் வைச்சே, தொலைச்சுப்புடுவேன், தொலைச்சு! இந்தக் கோவிந்தனிடம் வாலாட்டாதே. ஒட்ட நறுக்கிடுவேன்.





மேலேயுள்ள சரித்திரப் புகழ் பெற்றவர்கள் யார் யார் என்று தெரிகிறதா? கணிக்க முடியாதவர்களுக்கு —

விடை: 53 பக்கம் பார்க்க.




# கால்கேட் பற்பொடி உபயோகித்து உங்கள் பற்களையும், ஈறுகளையும் பாதுகாத்துக் கொள்ளுங்கள்! வாய் நாற்றத்தையும் அகற்றுங்கள்!




பழமையான கரகரப்பான பற்பொடிகள் உங்கள் ஈறுகளைச் சேதப்படுத்தி, பல் எனாமலைச் சிதைக்கக் கூடும். கால்கேட் பற்பொடி மிகவும் மென்மையானது. அது உங்கள் ஈறுகளுக்கு இதமளிக்கும்போதே, அதில் கலந்துள்ள மெருகேற்றும் பொருள் பற்களின் மீது படிந்துள்ள கறைகளைப் போக்கி, பற்களைச் சுத்தமாக வெண்மை பளிச்சிடச் செய்கிறது. கால்கேட்டின் வளமான நுரை பல் இடுக்குகளில் ஊடுருவி வாய் நாற்றம் - மற்றும் பற்சிதைவுக்குக் காரணமான கிருமிகளை அகற்றுகிறது. அதனால்தான் கால்கேட் பற்பொடி நவீன பராமரிப்பு முறையில், உங்கள் பற்களையும் ஈறுகளையும் பாதுகாக்கிறது; மற்றும் வாய் நாற்றத்தையும் உடனே நிறுத்துகிறது. அதன் குளுமையான இன்மணத்தையும் நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்!

**உங்கள் குடும்பத்திற்கு எகானமி சைஸ் கால்கேட் பற்பொடியை இன்றே வாங்குங்கள்! ஒரு டப்பா மாதக் கணக்கில் வரும்!**



...பூரணமான பல் பராமரிப்பிற்கு விஞ்ஞான முறையில் உருவாக்கப்பட்ட கால்கேட் டூத் ப்ரஷ் உபயோகியுங்கள்.

TP.G.21 TM

—ஏண்டி மானங் கெட்டவளே! நாடகமா ஆடுறே நீ? என்னைக் காதலிக்கிறதா 'பாவலா' பண்ணிக்கிட்டு இவனோட ஊர் சுத்தறியா?'' என்று கேட்டுக் கொண்டே செல்லத்தின் கழுத்தைப் பிடித்து நெரிக்கலானான். விழிகள் பிதுங்க அவள் திணறுவதைக் கண்ட வேலய்யன் அவளை விடுவிக்க விரைந்தான். பலன், வேலய்யனும் கோவிந்தனும் கட்டிப் புரண்டனர்.

ஆத்திரத்தில் வேலய்யன் கோவிந்தனைக் கடல் நீரில் பிடித்துத் தள்ளினான். அலைகள் அவனுக்குப் பக்கத் துணை இருந்து உதவின. கோவிந்தனை உருட்டிப் புரட்டிக் கடலுக்குள் கொண்டு சென்றன. நிமிஷங்கள் பல ஓடியும் அலைகள் அவனைக் கரைக்கு ஒதுக்கவில்லை. வேலய்யனுக்குக் கதி கலங்கிப் போயிற்று. செல்லமோ செய்வதறியாது திகைத்தாள். கடல் அலைகளோ இருவரையும் பார்த்துக் கெக்கலி கொட்டி நகைத்தன.

அதற்குப் பின் உருவான திட்டங்கள் அலைகளையே கூடப் புரட்டி எடுப்பவையாக அமைந்தன.

## 3

இரவு பதினொரு மணி சுமாருக்கு வாசற் கதவு தட்டும் ஓசை கேட்டு வெளியே வந்தான் தாயப்பன். நண்பன் வேலய்யனைக் கண்டதும் அவன் முகம் பேயறைந்தவனைப் போல் வெளிறி விட்டது. மூர்ச்சை போட்டு விழாத குறைதான்.

செத்தவன் பிழைப்பானா? மாண்டவன் மீண்டு வருவானா? — தலையிலிருந்து கால்வரை பார்த்தான். தரையில் கால் பாவுவதைக் கண்டபின்னும் அவனுக்குப் பேய் பிசாசு இல்லை என்று தீர்மானிக்க நீண்ட நேரம் பிடித்தது. நாக்குழற, வாய் குழறக் கேட்டான்: ''நான் கேள்விப்பட்டது...''

''...பெருங் கதை. நான் ஒரு பெண்ணைக் காதலித்தேன். அவளுக்கு முறைகாரன் ஒரு குடிகாரன். செல்லத்தோடு எதேச்சையாகக் கடற் கரைக்குப் போனேன். அங்கே அவனை நேருக்கு நேர் சந்திக்கும்படியாகி விட்டது. முழு போதையில் இருந்தவனோடு கை கலக்கும்படியும் ஆகி விட்டது. நான் சொல்வதை நம்பினால் நம்பு, நம்பா விட்டால் போ! கடல் அலைகள் அவனை இழுத்துக் கொண்டு போய் விட்டன; ஏன், உயிரையே குடித்துவிட்டன. மறுநாள் நான் செல்லத்தைக் கூட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டேன்!''

''என்ன கதை அளக்கிறியா? உங்க அம்மா உன் சடலத்தை அடக்கம் செய்தாங்கன்னு கேள்விப்பட்டேனே! அது எப்படி? ஒரு தாய்க்குத் தன் மகனை அடையாளம் தெரியாமல் போய் விடுமா? அல்லது அபூர்வ சகோதரர்கள் போல் பெற்ற தாயே புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு உருவ ஒற்றுமை ஏற்பட்டு விட்டிருக்குமா? ஒன்றே போல ஆயிரம் கன்றுகள் இருந்தாலும் தாய்ப் பசு தன் கன்றை இனம் கண்டு கொண்டு பால் தருமாம். உன்னை அடையாளம் கண்டு கொள்ள முடியாத அளவுக்கு உங்க அம்மா அறிவில்லாதவங்களாகப் போய் விட்டாங்களா?''

''இல்லே, தாயு! கோவிந்தனைக் கடல் அடிச்சுக்கிட்டுப் போய் வெகு நேரம் ஆகியும் அவன் கரைக்கு வந்து சேராமற் போகவே, எனக்குப் பயமாயிடுச்சு! அவன் யாரிடம் அடி வாங்கிக் கொண்டு வந்திருந்தானோ, நகக் கீறல்களும், ரத்தக் காயங்களுமாக வந்திருந்தான். அப்படியே என்னோடு சண்டை போட்டிருக்கிறான். எங்கே நம்மீது அந்தக் கொலைக் குற்றம் சுமந்து விடுமோ என்று பயந்து போனேன். அம்மாவிடம் போய் விஷயத்தைச் சொல்லி அவள் மீது ஆணை வைத்து ஓர் உறுதிமொழி வாங்கிக் கொண்டேன், அந்தப் பிணம் கரையிலே ஒதுங்கினால் தன் பிள்ளைன்னு சொல்லித் தகனம் செய்து விடணும்னு! இல்லாவிட்டால் அவள் பிள்ளை அவளுக்கு இல்லை என்று ஆகிவிடும் என்றும் பயம் காட்டினேன். அதோடு செல்லத்தைக் கண்ணாலம் கட்டிக்கிட்டு, அவளையும் அழைத்துப் போவதாக ஆசை வார்த்தைகள் சொன்னேன். தாய்ப் பாசம் பிள்ளையைக் காப்பாற்ற வேண்டி அப்படி நடித்திருக்கிறது!''

''அப்படி நடிச்சவங்க இப்போ எப்படி இருக்காங்க தெரியுமா? பெறாத பிள்ளையைப் பெத்த பிள்ளைன்னு சொல்லிக் கொள்ளி வச்சேனே பாவி! பெத்த பிள்ளை நல்லா இருக்கணுமேன்னு புலம்பித் தவிக்கிறாங்க. அதனால் போலீசுக்கு நீ சாகலேங்கிறது தெரிஞ்சு போயிடுச்சு! அதோடு லாரி முதலாளியும் நீதான் பணத்தைக் கையாடியிருப்பேன்னு போலீசிலே எழுதி வச்சிருக்கார்!'' என்றான் தாயப்பன்.

''பணத்தைக் கையாடியவன் நான்தான். செல்லத்தின் காதலைப் பெறும் ஆசையில் அப்படிச் செய்தேன். ஆனால் நான் களவாடிய பணம் கைமாறிப் போச்சு! காதலிச்ச செல்லமும் கூடத்தான். சினிமாவில்தான் முக்கோணக் காதல்னு நினைக்காதே. நிச வாழ்க்கையிலும் உண்டு. செல்லத்தைக் காதலித்தவர்கள் நாங்கள் மூன்று பேர். கோவிந்தன், நான், டிரைவர் முனுசாமி. உண்மையைக் கேட்கப் போனால் கோவிந்தனோடு மோதி அவனைக் காயப்படுத்தியவனே டிரைவர் முனுசாமிதான்! நான் முதலாளியின் பணத்தைக் 'கிளீன்' பண்ணினேன். டிரைவர் முனுசாமியோ கிளீனர் செல்லத்தையும் பணத்தையும் சேர்ந்தாற்போல் 'டிரைவ்' பண்ணிக்கிட்டுப் போயிட்டான்!''

சோகத்திலும் புன்னகை பூத்தான் வேலய்யன்.

**50-ம் பக்கத்துப் புதிருக்கு விடை:**

1. பிருதிவி ராஜர். 2. தைமூர். 3. நூர் ஜஹான். 4. ராணா பிரதாப சிம்மர். 5. ராபர்ட் கிளைவ். 6. ஹைதர் அலி. 7. லார்டு பெண்டிங்

# அட்டைப் படப் பிரமுகர்



அட்டைப்படப் பிரமுகர் குடியேற இருக்கும் ராஷ்டிரபதி பவன் மாளிகை.

இந்தியாவின் முதல் பிரஜை என்ற அந்தஸ்தைப் பெறஇருக்கும் ஜனாப் ஃபக்ருதீன் அலி அகமது அவர்கள் இருப்பது ஒன்றும் எண் இல்லத்தில். வீதி: வெலிங்டன் கிரஸண்ட், புதுதில்லி.

ராஷ்டிரபதி பவனத்துக்குக் குடி போக இருக்கும் ஜனாப் அகமது வசிப்பது ராஷ்டிரபதி எஸ்டேட்டில் உள்ள வீடுகளில் ஒன்றில் தான்! அழகான வரவேற்பறை. சுவர்களில் பலவர்ண ஓவியங்கள். மேஜைகளில் ஸ்டாண்டுகளில் புகைப் படங்கள். ஒரு பக்கம் ஸ்டீரியோ ரிகார்ட் பிளேயரும் இசைத் தட்டுகளும் இருக்கின்றன. ஒரு மூலையில் உள்ள மேஜையில் மனைவியுடன் எடுத்துக் கொண்ட புகைப்படத்தை வைத்திருக்கிறார்.

ஜனாப் அகமது வருகிறார்.

''தமிழ்மக்கள் சார்பாக உங்களுக்கு நல் வாழ்த்துக்கள்...''

''நன்றி... இன்னும் தேர்தல் நடக்க வேண்டும். அதற்குள்...''

''அட்வான்ஸ் வாழ்த்துக்களைக் கொடுப்பதில் தவறில்லை என்று நினைக்கிறேன்.... தாங்கள் கடந்த நாற்பது ஆண்டுகளுக்கு மேலாக அரசியலில் தீவிரமாக ஈடுபட்டு வந்திருக்கிறீர்கள். இப்போது அதைத் துறந்து விட்டு வேறு விதமான, சற்று அமைதியான வாழ்க்கைக்குச் செல்லப் போகிறீர்கள். அரசியலைத் துறப்பதைப் பற்றி வருத்தம் உண்டா?''

''வருத்தம் எதற்கு? அன்று அரசியலில் நுழைந்த போது சேவை மனப்பான்மையுடன் தான் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டேன். நாட்டுக்கு நல்லபடி பணி செய்ய ராஷ்டிரபதி பதவியிலும் நிறைய வாய்ப்புகள் உள்ளன. என் அந்தஸ்துகள் மாறலாம். ஆனால் என் மனப்பான்மை மாறவில்லை. என்னால் இயன்ற அளவு சேவை செய்வேன்.''

''தாங்கள் இங்கிலாந்துக்குச் சென்று 1927-ல் பட்டப்படிப்பு படித்து வந்தீர்கள். பஞ்சாபிலும் அஸ்ஸாமிலும் வழக்கறிஞர் தொழிலில் நல்ல பெயரும் சம்பாதித்தீர்கள். ஆனால் 1931-ல் அதாவது தங்களுடைய 26-வது வயதில் காங்கிரஸில் சேர்ந்து அரசியலில் ஈடுபட்டீர்கள். அரசியலில் ஏன் சேர்ந்தோம் என்று எப்போதாவது வருத்தப்பட்டிருக்கிறீர்களா?''

''இல்லை. ஏனெனில் ஏதோ சிறுபிள்ளைத் தனமாக நான் இதில் ஈடுபடவில்லை. தேசத்திலுள்ள நிலைமைகளை ஓரளவு உணர்ந்து, அரசியலில், சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டேன்.''

''ஆமாம். 26-வது வயதில் அரசியலில் தாங்கள் புகுந்தீர்கள். இப்போது இளைஞர்கள் இந்த வயதில் அரசியலில் நுழைவது பற்றித் தங்கள் கருத்து என்ன?''

''இரண்டு விஷயங்கள் முக்கியம். பதவியை மனத்தில் வைத்துக் கொண்டு அரசியலில் சேரக்கூடாது. தன் காலால் நிற்கும் சக்தி ஏற்பட்ட பிறகு, உலகில் நல்லது கெட்டது தெரிந்தபிறகு அரசியலில் இளைஞர்கள் சேரலாம்.''

அஸ்ஸாம் சட்டசபைக்கு 1935ல் தேர்ந்தெடுக்கப்பட்ட இவர் 1938—39-ல் நிதிமந்திரியாக இருந்தார். பிறகு ராஜிநாமா செய்து விட்டு 1940-ல் நடந்த தனி நபர் சத்தியாக்கிரகப் போரில் சேர்ந்தார். கிடைத்தது ஓராண்டு சிறைவாசம். சிறையிலிருந்து வெளியே வந்ததும் மறுபடியும் கைது செய்தார்கள். பாதுகாப்புக் கைதியாக மூன்றரை ஆண்டுகள் இருந்தார்.

''தாங்கள் சிறைவாசத்தின்போது என்ன செய்தீர்கள்?''

''புத்தகங்கள் படித்தேன். நண்பர்கள் என்னை லெக்சர் செய்யச் சொல்வார்கள். வாலிபால் விளையாடுவோம். அரசியல் விஷயங்களைச் சர்ச்சை செய்வோம். தமிழ் நாட்டின் கவர்னராக இருந்தாரே விஷ்ணுராம் மேதி, அவரும் என் ஜெயில் மேட்.''

''தாங்கள் ஏற்கனவே பிரசிடென்ட்டாக ஆகி யிருக்கிறீர்கள். அகில இந்திய டென்னிஸ் சங்கத்துக்குத் தாங்கள் தானே பிரசிடென்ட்?''

''ஆமாம். முன்பு நான் நிறைய டென்னிஸ் விளையாடுவேன். நான் அஸ்ஸாம் கால் பந்தாட்ட சங்கம், கிரிக்கெட் சங்கம் ஆகியவற்றுக்கும் பிரசிடென்ட்டாக இருந்தவன் தான். இப்போது டென்னிஸ் விளையாடுவதில்லை. நேரம் கிடைக்கும் போது கால்ஃப் விளையாடுவேன். தினந்தோறும் காலையில் 'வாக்' போகாமல் இருக்க மாட்டேன்!''

சில ஆண்டுகளுக்கு முன் கவிஞர் மிர்ஜா காலிப்பின் விழாவை நாடு முழுவதும்கொண்டாடச் சிறப்பாக ஏற்பாடு செய்த ஜனாப் அகமது, காலிப், இக்பால் போன்றவர்களின் கவிதைகளில் மிகுந்த ஈடுபாடு உடையவர்.

(இவருடைய மனைவியார் பேகம் அபீதா, காலிப்பின் பரம்பரையில் வந்தவராம்!)

இவருடைய பொழுதுபோக்குகள் என்ன?

''ஆல்டஸ் ஹக்ஸ்லி போன்ற எழுத்தாளர்களின் புத்தகங்கள் படிப்பது. அப்புறம் தோட்ட வேலையிலும் எனக்கு ஆர்வம் உண்டு'' என்கிறார்.

தோட்ட வேலையாம்! நல்லதுதான். இந்தியாவின் மிக அழகிய தோட்டங்களில் ஒன்றான 'மொகல் கார்டன்' (ராஷ்டிரபதி பவன் தோட்டம்) இனி மேலும் அழகு பெறும் என்று நம்பலாம், இல்லையா?

''சினிமா பார்ப்பீர்களா?''

''அவ்வளவு ஆர்வம் கிடையாது. என் மனைவி தொந்தரவு பண்ணி இழுத்துக் கொண்டு போவாள். வருடத்தில் நாலைந்து படங்கள் பார்த்தால் அதிகம். கடைசியாகப் பார்த்த படம் — பாபி''.

''பீகம் அவர்களுக்கு ஏதாவது விசேஷ ஈடுபாடு உண்டா?''

''வேண்டியது உண்டு. முக்கியமாக பெயின்டிங். அதோ ஒரு பெண்ணின் படம் இருக்கிறதே, அது என் மனைவி வரைந்தது தான். இதோ இந்த ஓவியம் கூட.''

''அவர் ஓவியம் கற்றிருக்கிறாரா?''

''அதெல்லாம் இல்லை. தானாகவே கற்றுக் கொண்டதுதான். ஆர்வம் தான் குரு. ஆனால் என் பெண் டில்லியில் ஓவியப் பள்ளியில் படித்திருக்கிறாள். இதோ பாருங்கள் இந்த பேமிலி டிரீ (Family Tree) அவள் போட்டது தான்'' என்று பெருமையாகக் காட்டுகிறார்.

''தங்கள் மகன் மகள் ஆகியவர்கள் என்ன செய்கிறார்கள்?''

''பெரிய பையன் பர்வேஸ் அகமது ஒரு டாக்டர். அவன் மனைவியும் டாக்டர். அவர்கள் இருவரும் நியூயார்க்கில் ஆராய்ச்சிப் படிப்பில் ஈடுபட்டிருக்கிறார்கள். இரண்டாவது பெண் ஹெமினா. அவள் கணவனும் ஒரு டாக்டர். ஃப்ளாரிடாவில் (அமெரிக்கா) இருக்கிறார்கள். மூன்றாவது பையன் டில்லி செயின்ட் ஸ்டீவன்ஸில் எகனாமிக் ஹானர்ஸ் படிக்கிறான். கடைசி வருஷம். இவனும் இதுவரையில் முதல் வகுப்பில் பாஸ் செய்திருக்கிறான்.''

''ராஷ்டிரபதி பதவி வெறும் ரப்பர் ஸ்டாம்புதான் என்கிறார்களே, தாங்கள் சந்தர்ப்பம் வந்தால் உங்கள் அதிகாரத்தை உபயோகிப்பீர்களா?''

''ரப்பர் ஸ்டாம்பு என்பதெல்லாம் அர்த்தமற்ற பேச்சு. இது ஜனநாயக நாடு. இதில் ராஷ்டிரபதிக்கு ஒரு முக்கிய இடம் உள்ளது. அதே சமயம் பாராளுமன்றத்துக்கும் மிக முக்கியமான அந்தஸ்து உள்ளது. அதுதான் சர்வ வல்லமை பொருந்தியது. எனக்குப் பாராளுமன்றத்தின்மீது அபார நம்பிக்கையும் மதிப்பும் உண்டு.''

''தாங்கள் சமீபத்தில் கூறியிருக்கிறீர்கள், என் வோட்டர்களையும், மக்களையும் சந்திக்கத்தான் சுற்றுப் பயணம் செய்கிறேன் என்று. பொது மக்கள் தங்களை எளிதில் அணுகுவதற்கு வசதியாக ஏதாவது விசேஷ ஏற்பாடுகளைச் செய்ய உத்தேசமா?''

''எப்போதுமே மக்களைச் சந்திக்க நான் ஆர்வமாயுள்ளேன்.''

''இல்லை. வாரத்தில் குறிப்பிட்ட நாள், குறிப்பிட்ட நேரத்தில் பொதுமக்கள் யார் வேண்டுமானாலும் ராஷ்டிரபதியைப் பார்க்கலாம் என்று ...''

''ஓஹோ ... அதைச் சொல்கிறீர்களா? இப்போது இந்தக் கேள்விக்கு எப்படிப் பதில் கூறுவது? இது ஒரு ஹேஷ்யமான கேள்வி ஆயிற்றே'' என்று கூறிவிட்டுக் கலகலவென்று சிரிக்கிறார். நகைக்கும்போது வருங்கால ராஷ்டிரபதியாக நம் முன் தென்படுவதில்லை. 69 வயது நிரம்பிய முதியவராகக் காட்சியளிக்கவில்லை.

பல ஆண்டுகளாக நெருங்கிப் பழகிய இளம் நண்பராகத் தோன்றுகிறார் ஜனாப் அகமது.

பேட்டி: **பி. எஸ். ரங்கநாதன்**

பாரதத்தின் முதல் ஜனாதிபதி. பின்னால் டாக்டர் ராதாகிருஷ்ணன், டாக்டர் ஜாகிர் ஹுஸைன், வி. வி. கிரி ஆகியோருக்கும் பிறகு இந்த உயர் பதவியை அலங்கரிக்க விருக்கிறார் ஃபக்ருதீன்அலி அகமது.





# காகிதம் ஜாக்கிரதை!

தராஜா

காகிதத்தின் விலை நாளுக்கு நாள் ஏறிக் கொண்டே வருவது உங்கள் அனைவருக்கும் தெரிந்திருக்கும். எனவே, ஊழியர்கள் எல்லோருமே காகிதத்தைச் சிக்கனமாகப் பயன்படுத்த வேண்டும். அநாவசியமாகக் கிறுக்குவது; காரணமின்றிக் கிழித்துக் குப்பைக் கூடையில் போடுவது; டிபன் அல்லது வேர்க்கடலை வைத்துக் கொண்டு சாப்பிடுவது — இவை அனைத்தும் தவிர்க்கப்பட வேண்டும். கூடுமான வரையில் கடிதங்களும், குறிப்புக்களும் சுருக்கமாக எழுதப் பழக வேண்டும். அநாவசியமான — அர்த்தமற்ற — சம்பந்தமில்லாத — வேண்டாத — பழங்கதை சமாசாரங்களை யெல்லாம் நீங்கள் எழுதும் கடிதங்களிலும், குறிப்புக்களிலும் சேர்ப்பதைத் தவிர்க்க வேண்டும்.

காகிதப் பற்றுக்குறையைச் சமாளிக்க, காகிதத்தில் இடைவெளி அதிகம் விடாமல் எழுத வேண்டும். தவிர, இரண்டு பக்கங்களிலும் எழுதும் பழக்கத்தை மேற்கொள்ள வேண்டும். மண்டை மண்டையாக எழுதாமல் இயன்ற அளவு சின்னஞ் சிறு எழுத்திலேயே எழுத வேண்டும்.

இன்னும் எப்படியெல்லாம் காகித விஷயத்தில் சிக்கனத்தைக் கடைப்பிடிக்கலாம் என்பதை எனக்கு — உங்கள் மேலதிகாரிகள் மூலம் — தெரியப்படுத்தவும். நல்ல யோசனைகளுக்குப் பரிசுகளும் வழங்கப்படும்.

மாத்ருபூதம்
மானேஜிங் டைரக்டர்
நித்தியகண்டம் அண்ட் கோ.

இந்தச் சுற்றறிக்கை மொத்தம் முப்பத்தாறு பிரதிகள் எடுக்கப்பட்டு, ஒவ்வோர் இலாகாவுக்கும் அனுப்பப்பட்டது. ஒவ்வோர் இலாகாவிலும் இதே சுற்றறிக்கைக்குப் பத்து பிரதிகள் வீதம் எடுத்து ஒவ்வோர் ஊழியர் மேஜை மீதும் வைத்தார்கள்.

இது நடந்த ஒரு வாரத்துக்கெல்லாம் மானேஜிங் டைரக்டர் மாத்ருபூதம் தமது அறைக்குள் நுழைந்தவுடன் 'தப்பித் தவறித் தபாலாபீசுக்குள் நுழைந்து விட்டோமா என்ன?'' என்று திகைத்துப் போனார். அந்த அளவுக்கு அவரது மேஜையின் மீது கடிதங்கள் வந்து குவிந்திருந்தன.

தமது காரியதரிசியைக் கூப்பிட்டுக் கடிதக் குவியலைச் சுட்டிக்காட்டி, ''என்ன இதெல்லாம் ?'' என்று கேட்டார் மாத்ருபூதம்.

''காகிதச் சிக்கனம் பற்றி நீங்கள் சுற்றறிக்கை விட்டீர்களல்லவா? அதன் பலன் தான்! அத்தனையும் யோசனைகள்!... எல்லாம் நம்ம ஆபீஸ் காகிதத்திலேயே எழுதி அனுப்பியிருக்கிறார்கள்!....''

''சரி, சரி...முதலில் இவற்றையெல்லாம் பிரித்துத் தனித் தனியே ஃபைல்களில் போட்டுக் கொண்டு வாருங்கள்!....'' என்றார் மாத்ருபூதம். அவ்விதமே 18 ஃபைல்கள் புதிதாகத் திறக்கப்பட்டன. அதற்கு மூன்று நாட்கள் பிடித்தன.

'' எங்கே வந்திருக்கும் யோசனைகளைப் படியும், கேட்போம் !''

''முதல் யோசனை: இப்போது நாம் கொடுக்கும் காகிதத்தின் அளவை — அதாவது நீளத்தை — பாதியாகக் குறைக்கலாம் என்று சொல்லியிருக்கிறான் ஒருத்தன்....''

''சரி, ஒவ்வொரு காகிதத்தையும் அரை அரையாகக் கிழிக்கச் சொல்லும்!...''

''ஒரு ஐடியா: அரையாகக் கிழிப்பதற்குப் பதிலாகக் கால் காலாகக் கிழித்துக் கொடுத்தால் இன்னும் நல்லதில்லையா?....''

'' இது யாருடைய ஐடியா ?''

''என்னுடையதுதான் !....''

''சரி, கால் காலாகவே கிழியும்... மேலே படியுங்கள்!....''

''ஒவ்வொரு குமாஸ்தா, டைப்பிஸ்ட், ஸ்டெனோகிராபரும் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட காகிதத்துக்குக் கணக்கு வைத்துக் கொள்ள வேண்டும் என்று உத்தரவு போடலாம்.........''

''நல்ல யோசனைதான்.... அதைச் செய்யுங்கள் முதலில்..... மீதி யோசனைகளை அப்புறம் பார்ப்போம்!....''

அதன்படியே இன்னொரு சுற்றறிக்கை விடப்பட்டது. இந்தச் சுற்றறிக்கைக்கும் ஆரம்பத்தில் சொன்ன கணக்குப்படி பிரதிகள் எடுக்கப்பட்டன.

''கணக்கு வைத்துக் கொள்வது என்றால் அதற்குத் தனியாக நோட்டுப் புத்தகம் வேண்டாமா?.... அதைக் கொடுங்கள் முதலில் !'' என்றார்கள் ஊழியர்கள். எனவே, எல்லோருக்கும் தலைக்கு ஓர் எண்பது பக்க நோட்டும் வழங்கப்பட்டது.

சில ஊழியர்கள் ஒழுங்காகக் கணக்கு எதுவும் வைத்துக் கொள்ளவில்லை; மேலதிகாரிகள் கேட்டபோது நோட்டை எடுத்துக் காட்டவும் இல்லை. அதற்காக அவர்களுக்கு 'எச்சரிக்கை' விடப்பட்டது. அவர்களிடமிருந்து பதில்கள் பெறப்பட்டு, அவை தனித் தனி ஃபைல்களில் (புதுசுதான்!) போடப்பட்டன.

கணக்கு என்று இருந்தால் ஊழலும் உடன் இருந்துதானே ஆக வேண்டும்?... ஊழல் புகார்கள் புதிது புதிதாகப் புறப்பட்டன. 'டெஸ்பாட்ச் கிளார்க் துரைசாமி பொய்க் கணக்குகள் காட்டுகிறார்', 'ஸ்டோர்ஸ் ராமபத்திரன் காகிதத்தைப் பதுக்குகிறான்', 'அக்கவுண்ட்ஸ் பலராமன் நோட்டுப் புத்தகத்தையே வீட்டுக்கு அமுக்கிக் கொண்டு போய்விட்டு, தொலைந்து போய்விட்டதாகப் புளுகுகிறான்' என்றெல்லாம் மொட்டைக் கடிதங்கள் 'ஆபீஸ் நலம் விரும்பி'களிடமிருந்து வரத் தொடங்கின.

இந்த மொட்டைக் கடிதங்களைப் போடவும், அவற்றின் மீது நடவடிக்கை எடுக்கவும் வெவ்வேறு ஃபைல்கள் ஆரம்பிக்கப்பட்டன. எல்லா ஃபைல்களும் மாத்ருபூதத்தின் மேஜைக்குப் போய்ச் சேர்ந்தன. அவர் தமது காரியதரிசியின் தலையில் அவற்றைக் கட்டினார். 'தலைவிதியே' என்று அந்த ஃபைல்களைப் பார்த்து, அவற்றின் மீது எம்.டி.யின் உத்தரவுகளைப் பெற்று, ஃபைல் செய்து, புகார்களைப் பைசல் செய்தார் காரியதரிசி.

அந்த மாதத்தில் மட்டும் காகிதம், ஃபைல், நோட்டுப் புத்தகங்கள் வாங்குவதற்கென்று மூவாயிரம் ரூபாய் அதிகமாகச் செலவிடப்பட்டிருந்தது. அக்கௌண்டெண்ட் இந்த விஷயத்தை மாத்ருபூதத்திடம் தெரிவிக்கவும், அவருக்கு பிளட் பிரஷர் ஏறியது. "கொண்டு வா அந்த யோசனைகள் ஃபைலை! வேறு ஏதாவது நல்ல யோசனைகள் கிடைக்கின்றனவா என்று பார்!" என்று கூச்சல் போட்டார்.

செக்ரடரி ஃபைலைப் புரட்டினார். "இதோ ஒரு நல்ல யோசனை இருக்கிறது சார். 'காகிதம் எதற்கு? ஆளுக்கு ஒரு ஸ்லேட்டுப் பலகையும் பலப்பமும் வாங்கிக் கொடுத்தால் இலாகாக்களிடையே கடிதப் போக்குவரத்துக்கெனக் காகிதம் செலவழிவதைத் தடுக்கலாம்' என்று ஓர் ஆசாமி சொல்லியிருக்கிறான்..."

"அதுவும் ஒரு ஐடியாதான். முதலில் அதைச் செய்யும். மற்ற வேலைகளை அப்புறம் பார்த்துக் கொள்ளலாம்!"

மீண்டும் ஒரு சுற்றறிக்கை பிரதிகள், மறு பிரதிகள். அதைத் தொடர்ந்து எல்லோருக்கும் ஒவ்வொரு ஸ்லேட்டும், அரை டஜன் பலப்பக் குச்சிகளும் வழங்கப்பட்டன. அவ்வளவுதான்.

புற்றிலிருந்து ஈசல் கிளம்புவதுபோலப் புதுப் புதுப் புகார்கள் புறப்பட்டன. "என் ஸ்லேட்டில் என்னதான் அழுத்தி எழுதினாலும் சரியாகத் தெரிய மாட்டேனென்கிறது!", "என் ஸ்லேட்டின் தகர முனை என் டெரிகாட்டன் சட்டையைக் கிழித்து விட்டது!", "எனக்குக் கொடுக்கப்படும் பலப்பம் சட்டுச் சட்டென்று உடைந்து விடுகிறது!", "எனக்குக் கலர் பலப்பம் வாங்கித் தரவும். அது இல்லாமல் கணக்குப் போட முடிவதில்லை!" —இப்படிக் கால் காகிதத்தில் நிறையப் பேர் எழுதியனுப்பினார்கள். அவற்றை ஃபைல் செய்வதற்கென்றே புதிதாக ஃபைல்கள் வாங்கிப் போட்டார்கள்.



இவை போதாவென்று பியூன்கள் வேறு அவ்வப்போது ஒரு மேஜையிலிருந்து இன்னொரு மேஜைக்குச் ஸ்லேட்டுகளைக் கொண்டு போனபோது 'கைத் தவறுதலாக' ஸ்லேட்டுக்களைக் கீழே போட்டு உடைத்தார்கள். உடனே அவர்கள்மீது "வேலையின்போது அஜாக்கிரதையாக இருந்து, கம்பெனிக்கு நஷ்டம் விளைவித்ததற்காக" விசாரணை நடத்தப்பட்டது. இதற்கெனவும் தனியே ஃபைல்கள் போடப்பட்டன.

இரண்டாம் மாதக் கடைசியில் மீண்டும் முதலாளியின் முன்னால் வந்து நின்று தலையைச் சொறிந்தார் அக்கௌண்டெண்ட்.

"என்ன ஐயா விஷயம்?" என்று கேட்டார் மாத்ருபூதம்.

"செலவு ஏறுகிறது ஸார்!"

"ஸ்லேட் உபயோகம் அமுலுக்கு வந்த பிறகுமா?"

. ''ஆமாம்... கலர் பலப்பமே நூற்றெண்பது ரூபாய்க்கு....''

''செக்ரட்டரி! கொண்டு வாய்யா அந்த யோசனைகள் ஃபைலை!''

ஃபைல் வந்தது. செக்ரட்டரி படித்தார். தலையை ஆட்டி ஆட்டியே ஒவ்வொரு யோசனையையும் உதறித் தள்ளினார் முதலாளி.

''ஆகா! இதோ ஓர் அற்புதமான ஐடியா! நம்ம டைப்பிஸ்ட் சுந்தரமூர்த்தி அனுப்பியிருக்கிறான்! நேற்றுத்தான் வந்திருக்கிறது!''

''படியும்!''

'''இலாகாக்களைப் பொறுத்த மட்டிலும் கடிதப் போக்குவரத்துக்குக் காகிதமும் வேண்டாம், சிலேட்டும் வேண்டாம். ஆபீஸ் சுவரிலேயே எழுதினால் பென்சில் செலவோடு போகும்' என்று எழுதியிருக்கிறான்!''

''வெரி குட்! போடு ஒரு சுற்றறிக்கை!''

போட்டார்கள்.

அதுமுதல் ஆபீஸ் சுவர்களுக்குப் பிடித்தது அனர்த்தம். ஒவ்வொரு இலாகாவுக்கும் எந்தெந்தச் சுவர் சொந்தம் (எழுதுவதற்கு மட்டும்தான்!) என்று தீர்மானித்து இன்னொரு சுற்றறிக்கையும் பிறந்தது. வழக்கப்படியே பிரதிகளும் எடுக்கப்பட்டன.

எல்லாச் சுவர்களிலும் இலாகாக்களுக்கிடையேயான சமாசாரங்கள் எழுதப்பட்டு, பதில்களும் பெறப்பட்டன. அதாவது எந்த இலாகாவிடமிருந்து பதில் தேவையோ அந்த இலாகாவில் போய் மற்றவர்கள் சுவரில் எழுதிவிட்டு வரவேண்டும். அதற்கான பதில்களை அந்தச் 'சுவர்க் கடிதத்தின்' கீழேயே எழுதி வைப்பார்கள்; பார்த்துக் கொள்ள வேண்டும். இப்படியே ஆபீசுக்குள் எல்லாக் கடிதப் போக்குவரத்தும் சுவர்கள் மூலமே நடைபெற்றது.

ஆனால் அப்போதும் புகார்கள் இல்லாமல் இல்லை.

''வேண்டுமென்றே ஸ்டோர்ஸ் இலாகா ஆசாமிகள் கடிதங்களை மிக உயரத்தில் எழுதி விட்டுப் போய் விடுகிறார்கள். அவ்வளவு உயரத்தில் எங்களால் எட்டிப் பதில் எழுத முடியவில்லை!'' என்று ஏஜென்ஸி இலாகா புகார் செய்தது. எனவே அந்த இலாகாவுக்கு மட்டும் உயரத்தில் எழுதுவதற்கு வசதியாக ஏணி ஒன்று வாங்கிக் கொடுக்கப்பட்டது.

மற்ற இலாகாவினர் இதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருப்பார்களா? ''எங்களுக்கும் ஏணி வேண்டும்!'' என்றார்கள். ஆபீஸ் முழுவதற்குமாக மொத்தம் முப்பத்தாறு ஏணிகள் வாங்கப்பட்டன. இதன் நேரடி விளைவாகத் தினசரி காலை, பிற்பகல், மாலை, மூன்று வேளைகளிலும் எல்லா இலாகாக்களிலும் அநேகமாக எல்லா ஊழியர்களுமே ஏணி மீது ஏறி நின்று கறுப்பு, சிவப்பு, நீலப் பென்சில்களால் சுவர்களில் கடிதங்களும் பதில்களும் எழுதத் தொடங்கினார்கள். ''நம்ம ஆபீசிலே சேரும்போது தரையிலே நின்றவனெல்லாம் இப்போது உசரத்திலே இருக்கான்!'' என்று மாத்ருபூதம் பெருமையாகச் சொல்லிக் கொள்ள ஆரம்பித்தார்.

''ஏணி மீது ஏறி விழுந்ததால் இடுப்புப் பிடித்துக் கொண்டு விட்டது'', ''கழுத்துச் சுளுக்கிக்கொண்டு விட்டது'', ''காலில் நரம்பு பிசகி விட்டது'' என்று அடிக்கடி பலர் லீவு போடத் தொடங்கினார்கள். ஓரிருவர் உண்மையிலேயே ஏணியிலிருந்து தவறிக் கீழே விழுந்து, கை, கால்களை முறித்துக் கொண்டார்கள். ஆக மொத்தம் ஆபீஸ் வேலை ஒழுங்காக நடக்கவில்லை.

இதற்கிடையில் ஒரு நாள் அந்தக் கட்டடச் சொந்தக்காரரிடமிருந்து மாத்ருபூதத்துக்குக் கடிதம் ஒன்று வந்தது. அதைப் படித்ததும் அவருக்கு முகம் பேயறைந்தது போல் ஆயிற்று.

''என்ன சார் விஷயம்?'' என்று விசாரித்தார் செகரட்டரி.

''சொந்தக்காரப் பசுபாலி நாளை மறுநாள் இங்கே வரப் போகிறானும் ஐயா... வாடகை ஒப்பந்தப்படி கட்டடத்துக்குச் சுண்ணாம்பு அடித்துக் கொடுக்கப் போகிறானும். நமக்கு எப்போது சௌகரியப்படும் என்று கேட்டிருக்கிறான்.''

''சுண்ணாம்பு அடித்தால் நம்ம கடிதாசுகள் எல்லாம் கோவிந்தா தான்!''

''அது கிடக்கட்டும் ஐயா, இப்போ அவன் வந்து பார்த்தானென்றால், 'சுவர் முழுதும் கிறுக்கியிருக்கிறீர்களே, கட்டடம் நாசமாகப் போய்விட்டது' என்று சத்தம் போடுவானே!''

''கவலைப்படாதீர்கள். எல்லாச் சுவர்களிலும் இருப்பதை ராவோடு ராவாக அழித்து விடலாம்!''

'' 'சுவர்க் கடிதங்கள்' போகிற கதி?''

''அதென்ன பிரமாதம்? எல்லாச் சுவர்க் கடிதங்களுக்கும் நம்ம டைப்பிஸ்ட்டுகளை விட்டுக் காகிதத்தில் பிரதி எடுத்து வைத்துக் கொள்ளச் சொல்கிறேன்... அப்புறம் சுவர்களை ரப்பரால் 'ஜிஞாக' அழித்து விடலாம்!''

''பேஷான ஐடியா ஐயா!''

இந்த 'ஐடியா'வும் நிறைவேற்றப்பட்டது. சில சுவர்களில் எழுதியிருந்ததைச் சரியாக அழிக்க முடியாததால் பிளேடுகளையும் இரும்புத் தகடுகளையும் வைத்துக்கொண்டு சுண்ணாம்புப் பூச்சுடன் சேர்த்துச் சுரண்டியெறிந்தார்கள்!

இவையெல்லாம் ஆன பிறகு செலவுக் கணக்கைப் பார்த்தால் ஒன்பதாயிரம் ரூபாய் அதிகமாகியிருந்தது. ''ஏணி, கலர்ப் பென்சில், ரப்பர், பிரதி எடுக்க டைப்பிஸ்டுகளுக்கு ஓவர்டைம், சுவர்களைச் சுரண்டவும், அழிக்கவும் ஓவர் டைம் – இதெல்லாம்தான் காரணம்!'' என்று விளக்கினார் அக்கௌண்டெண்ட்.

''இனியும் நம்மால் பிஸினஸ் பண்ண முடியாதய்யா. விற்று விடுகிறேன் பிஸினெஸை. யாராவது நல்ல ஆளாக இருந்தால் சொல்லுங்கள்!'' என்றார் மாத்ருபூதம்.

''ஒருத்தர் இருக்கிறார் – கையிலே ரெடியாகப் பணத்தை வைத்துக் கொண்டு!''

''யார் அது?''

''நமக்கு வழக்கமாகக் காகிதம், பென்சில் ரப்பர், சிலேட்டு, கலர்ப் பென்சில் – இவைகளை சப்ளை செய்வாரே, அவர்தான்!''




# விருந்தின் விலை

**பி.வி.ஆர்.**

**கா**ரியாலய அலுவல் நிமித்தமாகக் கோயமுத்தூர் போயிருந்தேன். ஒரு நாள் மாலை, தாயார் மனைவி இவர்களின் வற்புறுத்தல் காரணமாகத் தூர உறவினர் ஒருவர் வீட்டுக்குக் குசலம் விசாரிக்கப் போனேன். போன இடத்தில் குடும்பத் தலைவர் இல்லை. அவருடைய மனைவி என்னைப் பார்த்தது கூட இல்லை. பதினன்கு வயதிலிருந்து படிப்படியாக இரண்டு இரண்டு வயது வித்தியாசத்தில் குமாரனும் குமாரியும் மாஸ்டரும் பேபியுமாக என்னை வளைத்துக் கொண்டார்கள். இவ்வளவு குழந்தைகள் இருக்கும் வீட்டுக்கு வெறுங் கையுடன் வந்து நிற்கிறேமே என்று வெட்கம் என்னைப் பிடுங்கித் தின்றது. வெளியே போய் வாங்கிக் கொண்டு வந்தாலும் அவர்கள் என்னுடைய ஆரம்ப முட்டாள்தனத்தை மன்னிக்க மாட்டார்கள்.

குடும்பத் தலைவர் ஒரு வழியாக வந்தார். என்னைப் புரிந்து கொண்டதும் தாம் தூம் என்று குதித்தார். அவருடைய சிறு வயதில் அவருக்கு ஆதரவு அளித்ததே என் தகப்பனர் தானும். எங்கள் குடும்பத்துக்கே அவர் என்றென்றும் கடமைப்பட்டவராம். பேச்செல்லாம் (அவருடையதுதான்) ஒரு மாதிரியாக முடிந்ததும் எழுந்தேன். சாப்பிட வேண்டும் என்று வற்புறுத்தினர். ஒரு நண்பர் வீட்டு விருந்துக்கு நான் செல்ல வேண்டும் என்று ஏற்கெனவே ஏற்பாடாகி விட்டபடியால் அவரால் ஒன்றும் பேச முடியவில்லை. மறுநாள் இரவு நான் வந்துதான் ஆக வேண்டும் என்று பிடிவாதம் பிடித்தார். மனைவியும் சுருதி சேர்த்துப் பாடவே நான் ஒப்புக்கொண்டேன்.

மறு நாள் சாயங்காலம் விருந்துக்குச் சென்றேன். கொத்தவரைக்காய், பூசணிக்காய், கத்தரிக்காய் எல்லாம் ஒவ்வொரு ரூபத்தில் விழுந்தன. எனக்கு எதுவுமே பிடிக்காது. ஏதோ சாப்பிட்டேன்.

ஓட்டலில் சாப்பிட்டிருந்தால் என் செலவு ஒரு ரூபாய் ஐம்பது பைசாவுடன் போயிருக்கும்.

தூரத்து உறவினர் — அவருக்கும் எங்களுக்கும் எந்த விதமான சம்பந்தமும் கடந்த இருபது ஆண்டுகளாகக் கிடையாது. வீட்டுவிருந்துக்குப் போனதில் எனக்குச் செலவு ஏழு ரூபாய். எப்படி? போக வர ஆட்டோவுக்கு ரூபாய் இரண்டு. மலை வாழைப் பழம் இரண்டு டஜன்: ரூபாய் இரண்டரை. கடைசி இரு குழந்தைகளுக்குச் சாக்லேட்டும் பிஸ்கட்டும் ரூபாய் 2.

அவர் வீட்டில் முகத்தைத் துடைத்துக் கொள்ள ஷர்ட் பையிலிருந்து கைக்குட்டை எடுக்கையில் ஒரு ஐம்பது பைசா நாணயம் கீழே விழுந்து விட்டது.

''கீழே விழுந்தது எனக்குத்தான், கீழே விழுந்தது எனக்குத்தான்'' என்று கும்மாளமிட்டுக் கொண்டே ஆறு வயதுப் பிள்ளை நாணயத்தைத் தாவி எடுத்தான். தன் நிஜார்ப் பையில் போட்டுக் கொண்டு ஓடினான்.



முந்தின நாள் நண்பர் வீட்டு விருந்துக்குப் போனதில் எனக்கு நான்கு ரூபாய் செலவு. (நண்பனுக்குக் குழந்தைகள் இல்லாததால் சாக்லேட்டும் பிஸ்கட்டும் பிழைத்தன. ஆனல் ஓட்டல் ஸ்வீட் மூன்று ரூபாயைப் பிடுங்கிக் கொண்டது).

விருந்து கொடுக்கிறவனை விட விருந்தாளியாகப் போகிறவனுக்குச் செலவு அதிகமாகிறது. இரண்டு பேருமே போலி கௌரவத்தில் வாழ்கிறார்கள். வெளியூரிலிருந்து வந்திருக்கிறவனை ஒரு தடவை கூடச் சாப்பிடக் கூப்பிடா விட்டால் தன்னைப் பற்றிக் கேவலமாக நினைத்துக்கொண்டு அதைத் தன் ஊரில் நான்கு பேர்களிடம் சொல்லி அவமானப்படுத்துவானே என்று ஒரு பக்கத்தில் பயம். இலையில் உட்காரப் போகிறவன் வெறும் கையுடன் போனல் அவனுடைய கஞ்சத்தனத்தையும் அநாகரீகத்தையும் அவன் கை கழுவிக் கொண்டு போன பின் வீட்டில் உள்ளவர்கள் அலசுவார்களோ என்று இன்னொரு பக்கத்தில் பயம்.

மொத்தத்தில் போலி கௌரவமே நாகரிகமாகி விடுகிறது. விரலுக்கு மேல் வீங்குகிற அளவுக்கு நம்மை நாமே அடிமைப்படுத்திக் கொள்கிறோம். இந்த நாகரிகத்துக்குப் 'பண்பு' என்றும் பெயர் கொடுத்து நாம் பண்பிலிருந்து வழுவாதவர்கள் என்று பெருமைப் பட்டுக் கொள்கிறோம். நமக்காக, நாம் பால் குடித்தால் உடம்பு தேறலாம். பிறத்தியாருக்காகவே குடித்துப் பழகிக்கொண்டால் யாருக்குத் திருப்தி? நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிற எத்தனையோ விஷயங்களில் இதுவும் ஒன்றுதான்!





SAPPY
PEANUT CANDY
GOES TO EUROPE
EUROPE
EXPORT
SAPPY
A QUALITY PRODUCT OF
DALMIA UDYOG
SNACK SWEET FOR
SWINGING SWEET
A QUALITY PRODUCT OF
DALMIA UDYOG

# பொழுது போக!

■ 1. சித்தன் வாழ்வு
2. அலைவாய்
3. அத்தியூர்
4. புலியூர்

இவை எந்த ஊர்களின் பெயர்கள்?

1. சித்தன் வாழ்வு - பழனி; 2. அலைவாய் - திருச்செந்தூர்; 3. அத்தியூர் - சின்னக் காஞ்சிபுரம்; 4. புலியூர் - சிதம்பரம்.

■ ஆணைவிடப் பெண் சுவாசிக்கும் வேகம் மூன்றில் ஒரு மடங்கு அதிகமாகும்!

■ ஒருவர் மற்றவருக்குத் தரும் முத்தம் 55 வாட்ஸ் மின்சார சக்தியைத் தரக் கூடியதாம்!

■ சைக்கிளின் இரு சக்கரங்களிலும் ஸ்போக்ஸ் கம்பிகள் ஒன்றுபோல் இராது. முன் சக்கரத்தில் 32 கம்பிகளும் பின் சக்கரத்தில் 40 கம்பிகளும் இருக்கும்! எண்ணிப் பார்த்து வாங்குங்கள்!

■ அழகிய மக்களைப் பெறவும், அவர்களை முன்னேற்றமடையச் செய்யவும், வேதனையில்லாமல் குழந்தைகள் பெறவும் பல மந்திரங்கள் அதர்வண வேதத்தில் உள்ளன. நம் உடம்பிலுள்ள எலும்புகளின் எண்ணிக்கையைக் கூறுகிறது அது. தமனியில் ஓடும் சிவப்பு ரத்தத்துக்கு அருணா என்றும் சிரையில் ஓடும் கறுப்பு ரத்தத்துக்கு லோஹினி என்றும் பெயரைக் கூறுகிறது அது.

■ மழை வரப் போவதை முன்கூட்டியே அறியும் சக்தி மிருகங்களிடம் - முக்கியமாகக் கழுதையிடம் உண்டு. அதனாலேயே சலவைத் தொழிலாளர்கள் அவற்றைப் பயன்படுத்துகிறார்கள்!

■ டென்னிஸ் மைதானம் எப்படி அமையும்? வடக்குத் தெற்காக!







■ பெப்பர்மிண்ட் தைலத்தைப் பஞ்சில் நனைத்து எலி வளைகளில் அதை வைத்துவிட்டால் எலிகள் வளையை விட்டு ஓடிவிடும்!

■ கார்பின் என்னும் மீனின் எலும்புகள் பச்சை நிறமாக இருக்கும்.

மினாக்கவி டிராகன் என்ற மீனுக்கு ஒளிவிடும் பற்கள் உள்ளன.

ஏழு பவுண்டு எடையுள்ள காட்மீன் ஒரே சமயத்தில் 70 லட்சம் முட்டைகள் இடும்.

■ மனிதர்களுடைய தலைமயிர் ஒரு வருடத்தில் பதினைந்து அங்குல நீளம் வளரும்! 'வளரட்டுமே' என்கிறீர் அலட்சியமாய் ஒரு வழுக்கைத் தலையர்.

■ சாம்பிராணி ஒரு வகை மரத்தின் பிசின்.

■ ஸ்ரீரங்கம் கோயிலுக்கு 15 கோபுரங்கள். மூன்று வெளி மதில்களிலும் நாலு நாலு வீதம் 12ம் அடுத்துள்ள உள் மதிலில் மூன்றுமாகப் பதினைந்து கோபுரங்கள் உள்ளன.

■ சருமம் பளபளப்படைய எண்ணெய் தேய்த்துக் குளிக்க வேண்டும். சருமத் துவாரங்களில் தங்கும் எண்ணெயில் சூரிய ஒளியிலிருந்து அல்ட்ரா வயலட் கிரணங்கள் படும்பொழுது வைட்டமின் டி உண்டாகி உடலுக்குள் செல்கிறது. எண்ணெயைக் கொஞ்சம் காய்ச்சித் தேய்த்துக் கொண்டால் சருமத் துவாரங்களில் எளிதில் செல்லும். "எண்ணெய் விற்கிற விலையில்..." என்று பல்லைக் கடிப்பது கேட்கிறது, நறநறவென்று!

— சே. வேங்கடராமன்

Printed and published by V. Vaidyanathan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at Kalki Press, Chetput, Madras-600031. Editor: K. Rajendran

# வெள்ளைத் துணிகள் பழுப்பேறுவானேன்?




## பழுப்புக்கு மூடுவிழா, வெளுப்புக்குத் திறப்பு விழா: புது ரின்ஸோ பவுடர்

சோப்புப் போடப் போட வெள்ளைத் துணிகள் பழுப்பேறி அழுதுவடிகிறது அல்லவா? அதைத் தான் அகற்றப் பிறந்தது ரின்ஸோ. டிட்டர்ஜெண்ட் சலவைக் கலையிலே ஒரு முன்னேற்றப் புத்தேடு. விழி திறந்த விடிவெள்ளி. உரித்தெடுத்த ஒளிவெண்மைக்கு: ரின்ஸோ. ஓகோ என்றும் தரம் - - - வாகான விலையும்.

## வெண்மை பளிச்சிட வெளுப்பது ரின்ஸோ

லின்டாஸ்-RINSO-1-140 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon
இலங்கையில் விலை 60 சதம் (தபால் செலவு தனி)